சிவமயம்.



சைவசமயாசாரியர்களில் முதல்வராகிய

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

## திருமுறைமூன்றும்

கயிலாயபரம்பரைத்

திருவாவடுதுறை-ஆதீனத்துப்பிரசங்கிகளாகிய

வித்வான் - காஞ்சீபுரம்

**சபாபதிமுதலியாரவர்களால்**

ஆராய்ச்சிசெய்து

திருநெல்வேலி

அப்பாவுபிள்ளையுதவியினாலும்

வாயிலாநெல்லூர்

நமசிவாயமுதலியார் உதவியினாலும்

திருமயிலை

**சுப்பராயஞானியாரால்**

பாலக்குறிச்சி

**குமாரசாமையரவர்களது**

கலாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ருத்திரோத்காரி வருஷம்

ஐப்பசிமீ



உ

சிவமயம்.





அம்மையார் அருளிச்செய்த

திருவாலங்காடு

# மூத்த திருப்பதிகம்



(பண் - நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

கொங்கைதிரங்கிநரம்பெழுந்துகுண்டுகண்வெண்பற்குழிவயிற்றுப்
பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர்நீள்கணைக்காலோர்பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசையும்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (க)

கள்ளிக்கவட்டிடைக்காலைநீட்டிக்கடைக்கொள்ளிவாங்கிமசித்துமையை
விள்ளவெழுதிவெடுவெடென்னநக்குவெருண்டுவிலங்குகாட்டிற்
றுள்ளித்துடித்துச்சுடுபிணத்திச்சுட்டிடமுற்றுஞ்சுளிந்துபூதி
யள்ளியவிக்கநின்றாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (உ)

வாகைவிரிந்துவெண்ணெற்றொலிப்பமயங்கிருள்கூர்நடுநாளையாங்கே
கூகையோடாண்டலைபாட வாந்தைகோடதன்மேற் குதித்தோடவீசி
யீகைபடர்தொடர்கள்ளிநீழலீமமிடுசுடுகாட்டகத்தே
யாகங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (ந)

குண்டிலோமக்குழிச்சோற்றைவாங்கிக்குறுநரிதின்னவதனைமுன்னே
கண்டிலோமென்றுகனன்றுபேய்கள்கையடித்தோடிடுங்காடரங்கா
மண்டிலநின்றங்குளாலமிட்டுமட்டித்துவீசியெடுத்தபாத
மண்டமுறநிமிர்ந்தாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௪)

விழுதுநிணத்தைவிழுங்கவிட்டுவெண்டலைமாலைவிரவிப்பூட்டிக்
கழுதுதன்பிள்ளையைக்காளியென்றுபேரிட்டுச் சீருடைத்தாய்வளர்த்
புழுதிதுடைத்துமுலைகொடுத்துப்போயினதாயைவரவுகாணா [துப்
தழுதுறங்கும்புறங்காட்டிலாடுமப்பனிடந்திருவாலங்காடே. (௫)

கழலுமழல்விழிக்கொள்ளிவாய்ப்பேய்சூழ்ந்து துணங்கையிட்டோடி
யாடித், தழலுளெரியும்பிணத்தைவாங்கித்தான்றடித்தின் றணங்காடுகா
ட்டிற், கழலொலியோசைச்சிலம்பொலிப்பக்காலுயர்வட்டணையிட்டு
நட்ட, மழலுமிழ்ந்தோரிகதிக்கவாடுமெப்பனிடந்திருவாலங்காடே. ௭

பட்டடிநெட்டுகிர்ப்பாறுகாற்பேய்பருந்தொடுகூகைபகண்டையார்ந்
தை, குட்டியிடமுட்டைகூகைபேய்கள்குறுநரிசென்றணங்காடுகாட்
டிற், பிட்டடித்துப்புறங்காட்டிலிட்ட பிணத்தினைப்போகப்புரட்டி
யாங்கே, யட்டமேபாயநின்றாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.

நாடுநகருந்திரிந்துசென்றுநன்னெறிநாடிநயந்தவரை
மூடிமுதுபிணத்திட்டமாடேமுன்னியபேய்க்கணஞ்சூழச்சூழக்
காடுங்கடலுமலையுமண்ணும்விண்ணுஞ்சுழலவனல்கையேந்தி
யாடுமரவப்புயங்கனெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௮)

துத்தங்கைக்கிள்ளைவிளரிதார முழையிளியோசைபண்கெழுமப்பாடி
சச்சரிகொக்கரைதக்கையோடுதகுணிச்சந்துந்துமிதாளம்வீணை [ச்
மத்தளங்கரடிகைவன்கைமென்றோற்றமருகங்குடமுழாமொந்தைவா
சித், தத்தனமைவினோடாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௯)

புந்திகலங்கிமதிமயங்கியிறந்தவரைப்புறங்காட்டிலிட்டுச்
சந்தியில்வைத்துக்கடமைசெய்துதக்கவரிட்டசெந்தீவிளக்கா
முந்தியமரர்முழவினோசைதிசைகதுவச்சிலம்பார்க்கவார்க்க
வந்தியின்மாநடமாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௰)

ஒப்பிணையில்லவன்பேய்கள்கூடி யொன்றினையொன்றடித்தொக்கலித்
துப், பப்பினையிட்டுப்பகண்டைபாடப்பாடிருந்தந்நரியாழமைப்ப
வப்பனையணிதிருவாலங்காட்டு ளடிகளைச்செடிதலைக்காரைக்காற்பேய்
செப்பியசெந்தமிழ்பத்தும்வல்லார்சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே.

திருச்சிற்றம்பலம்.

---

(மூத்ததிருப்பதிகம்-பண்-இந்தளம்.)

௨ திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவமீகைசூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளிசோர்ந்தகுடர்கவ்வப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளியாடக்குழகனாடுமே. (௧)

நிணந்தானுருகிநிலந்தானனைப்பநெடும்பற்குழிகட்பேய்
துணங்கையெறிந்துசூழுநோக்கிச்சுடலைநவித்தெங்குங்
கணங்கள்கூடிப்பிணங்கண்மாந்திக்களித்தமநத்தவா
யணங்குகாட்டிலனல்கையேந்தியழகனாடுமே. (௨)

புட்கள்பொதுத்தபுலால்வெண்டலையைப்புறமேநரிகவ்வவ்
வட்கென்றழைப்பவாந்தைவீசவருகேசிறுகூகை
யுட்கவிழிக்கவூமன்வெருட்டவோரிகதித்தெங்கும்
பிட்கநட்டம்பேணுமிறைவன்பெயரும்பெருங்காடே. (௩)

முள்ளிதீந்துமுளரிகருகிமூளைசொரிந்துக்குக்
கள்ளிவற்றிவெள்ளில்பிறங்குகடுவெங்காட்டுள்ளே
புள்ளியுழைமான்றோலொன்றுடுத்துப்புலித்தோல்பியற்கிட்டுப்
பள்ளியிடமுமதுவேயாகப்பரமனாடுமே. (௪)

செத்தபிணத்தைத்தெளியாதொருபேய்சென்றுவிரல்சுட்டிக்
கத்தியுறுமிக்கனல்விட்டெரிந்துகடக்கப்பாய்ந்துபோய்ப்
பற்றல்வயிற்றைப்பதைக்கமோதிப்பலபேயிரிந்தோடப்
பித்தவேடங்கொண்டுநட்டம்பெருமானாடுமே. (௫)

வாளைக்கிளரவளைவாளெயிற்றுவண்ணச்சிறுகூகை
மூளைத்தலையும்பிணமும்விழுங்கிமுரலுமுதுகாட்டிற்
றாளிப்பனையினிலைபோன்மயிர்கடழல்வாயழல்கட்பேய்
கூளிக்கணங்கள்குழலோடியம்பக்குழகனாடுமே. (௬)

நொந்திக்கிடந்தசுடலைதடவிநுகரும்புழுக்கின்றிச்
சிந்தித்திருந்தங்குறங்குஞ்சிறுபேய்சிரமப்படுகாட்டின்
முந்தியமரர்முழவினோசைமுறைமைவழுவாமே
யந்திநிருத்தமனல்கையேந்தியழகனாடுமே. (௭)

வேய்களோங்கிவெண்முத்துதிரும்வெடிகொள்சுடலையு
ளோயுமுருவிலுலறுகூந்தலலறுபகுவாய
பேய்கள்கூடிப்பிணங்கண்மாந்தியணங்குபெருங்காட்டின்
மாயனாடமலையான்மகளுமருண்டுநோக்குமே. (௮)

கடுவனுகளுங்கழைசூழ்பொதும்பிற்கழுகும்பேயுமா
யிடுவெண்டலையுமீமப்புகையுமெழுந்தபெருங்காட்டிற்
கொடுவெண்மழுவும்பிறையுந்ததும்பக்கொள்ளென்றிசைபாடப்
படுவெண்டுடியும்பறையுங்கறங்கப்பரமனாடுமே. (௯)

குண்டைவயிற்றுக்குறியசிறியநெடியபிறங்கற்பே
யிண்டுபடர்ந்தவிருள்சூழ்மயானத்தெரிவாயெயிற்றுப்பேய்
குண்டுகுழவித்தழுவவெருட்டிக்கொள்ளென்றிசைபாட
மிண்டிமிளிர்ந்தசடைகடாழவிமலனாடுமே. (௰)

சூடுமதியஞ்சடைமேலுடையார்சுழல்வார்திருநட்ட
மாடுமரவமரையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பிறவாநாசமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

அம்மையாரருளிச்செய்த-திருவாலங்காடு

மூத்ததிருப்பதிகம்

முற்றிற்று.

# முதற்றிருமுறையின் பிழைதிருத்தம்.

| பக்கம் | பாட்டு | வரி. | பிழை | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௰௪ | ௰௧ | ௧ | யானம் | யானும் |
| ௨௯ | ௮ | ௨ | வளை | வளா |
| ஷை | ௧ | ௧ | வரகோ | வரவுகொ |
| ௩௩ | ௨ | ௪ | திளா | திகர் |
| ஷை | ௫ | ௧ | செய | செய் |
| ௩௬ | ௭ | ௩ | நடர்ந்தர்ர் | நடந்தார் |
| ௪௧ | ௮ | ௩ | வல்லரக்கன் | வல்லவரக்கன் |
| ௪௨ | ௪ | ௧ | ஒழியாப் | ஒழியப் |
| ௪௪ | ௬ | ௩ | மேருலாவு | பேருலாவு |
| ௪௬ | ௰ | ௪ | தருபுகலி | தருபூம்புகலி |
| ஷை | ௨ | ௨ | குழல்தொங்கிய | குளத்தோங்கிய |
| ஷை | ௪ | ௨ | பாலனநோக்கி | பானலநோக்கிக் |
| ௪௭ | ௭ | ௨ | காதிலங்க | காதிலிலங்க |
| ஷை | ௰௧ | ௧ | காழி | காழியுள் |
| ௫௩ | ௭ | ௨ | னென்பல | னெண்பல |
| ௫௮ | ௩ | ௪ | நூல்மறை | நான்மறை |
| ௬௩ | ௨ | ௪ | செய்ததோரிவ | செய்வதோவிவ |
| ஷை | ௪ | ௧ | மதிகண்ணி | மதிக்கண்ணி |
| ௬௫ | ௭ | ௩ | வேத்தும் | லேத்தும் |
| ஷை | ௰௧ | ௧ | சாற்றி | சாத்தி |
| ௭௮ | ௫ | ௧ | கொழுமடு | கொடுமழு |
| ௭௯ | ௨ | ௧ | கள்ளன | கள்மிளன |
| ௮௨ | ௨ | ௨ | விரத் | வீரத் |
| ஷை | ௩ | ௨ | விரத் | வீரத் |
| ௮௫ | ௫ | ௨ | தங்காண் | தங்காள் |
| ௯௨ | ௧ | ௨ | வித்தகன் | வித்தகர் |
| ௯௭ | ௮ | ௨ | ரொடு | லெடு |
| ௱௫ | ௬ | ௧ | முழங்கு | மூழ்கு |
| ௱௰௪ | ௧ | ௨ | சாயல | சாயல் |
| ௱௨௩ | ௩ | ௩ | சிந்தித்தொழ | சிந்தித்தெழ |
| ௱௩௭ | ௰ | ௧ | லான | லாஞன் |
| ௱௫௨ | — | — | பாதாளேச்சுரம் | பாதாளீச்சுரம் |
| ௱௫௩ | ௰ | ௩ | வண்டினங்கண | வண்டினங்கண் |
| ௱௬௫ | ௯ | ௧ | யெந்திற்று | யேந்தித்து |
| ௱௮௧ | ௰ | — | ஞுள்ளவர் | ஞுள்ளவா |
| ௱௯௧ | ௰௨ | ௬ | மாப்பந்த | மாயந்த |
| ௨௱௮ | — | — | பராயத்துறை | பராய்த்துறை |





சிவமயம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

## அடங்கன்முறைத்

# தேவாரப்பதிகங்கள்.



(திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிப்பூசியென்னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாள்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (க)

முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகலனாப்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (உ)

நீர்பரந்தநிமிர்புன்சடைமேலோர்நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுலகின்முதலாகியவோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௩)

விண்மகிழ்ந்தமதிலெய்ததுமன்றிவிளங்குதலையோட்டி
லுண்மகிழ்ந்துபலிதேரியவந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவரவம்மலர்க்கொன்றைமலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (ச)

ஒருமைப்பெண்மையுடையன்சடையன்விடையூரும்மிவனென்ன
வருமையாகவுரைசெய்யவமர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல்கொள்ளமிதந்ததோர்காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௫)

மறைகலந்தவொலிபாடலொடாடலராகிமழுவேந்தி
யிறைகலந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடியார்பொழில்நீடுயர்சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௬)

சடைமுயங்குபுனலன்னனலன்னெரிவீசிச்சதிர்வெய்தி
யுடைமுயங்குமரவோடுழிதந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழிசூழ்குளிர்கானல்பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௭)

வியரிலங்குவரையுந்தியதோள்களைவீரம்விளைவித்த
வு[illegible]ரிலங்கையரையன்வலிசெற்றெனதுள்ளங்கவர்கள்வன்
[illegible]லங்குமுலகிற்பலவூழிகடோன்றும்பொழுதெல்லாம்
[illegible]ங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௮)

[illegible]றுதல்செய்திறைகாணியமாலொடுதண்டாமரையானு
[illegible]ணுதல்செய்தொழியந்நிமிர்ந்தானெனதுள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மகளிர்முதலாகியவையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௯)

புத்தரோடுபொறியில்சமணும்புறங்கூறநெறிநில்லா
வொத்தசொல்லவுலகம்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறுகவ்வுரிபோர்த்ததோர்மாயமிதுவென்னப்
பித்தர்போலும்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௰)

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் - சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - பிரமபுரீசர் - தேவியார்-திருநிலைநாயகி.
திருத்தோணியில்வீற்றிருப்பவர் தோணியப்பர்.

---

(திருப்புகலூர்-பண்- நட்டபாடை.)
திருச்சிற்றம்பலம்.

குறிகலந்தவிசைபாடலினானசையாலிவ்வுலகெல்லா
நெறிகலந்ததொருசீர்மையனாயெருதேறும்பலிபேணி
முறிகலந்ததொருதோலரைமேலுடையானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில்சூழ்ந்தயலேபுயலாரும்புகலூரே. (௧)

காதிலங்குழையன்னிழைசேர்திருமார்பன்னொருபாகம்
மாதிலங்குதிருமேனியினான்கருமானின்னுரியாடை
மீதிலங்கவணிந்தானிமையோர்தொழமேவுமிடஞ்சோலைப்
போதிலங்குநசையால்வரிவண்டிசைபாடும்புகலூரே. (௨)

பண்ணிலாவுமறைபாடலினானிறைசேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடையான்பெரியார்கழலென்றுந்தொழுதேத்த
வுண்ணிலாவியவர்சிந்தையுணீங்காவொருவற்கிடமென்பர்
மண்ணிலாவும்மடியார்குடிமைத்தொழில்மல்கும்புகலூரே. (௩)

நீரின்மல்குசடையன்விடையன்னடையார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலையேசிலையாகமுனிந்தன்றுலகுய்யக்
காரின்மல்குகடனஞ்சமதுண்டகடவுள்ளிடமென்ப
ரூரின்மல்கிவளர்செம்மையினாலுயர்வெய்தும்புகலூரே. (௪)

செய்யமேனிவெளியபொடிப்பூசுவர்சேரும்மடியார்மேற்
பையநின்றவினையாற்றுவர்போற்றிசைத்தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெருமானுறையும்மிடமென்பாரருள்பேணிப்
பொய்யிலாதமனத்தார்பிரியாதுபொருந்தும்புகலூரே. (௫)

கழலினோசைசிலம்பின்னொலியோசைகலிக்கப்பயில்கானிற்
குழலினோசைகுறட்பாரிடம்போற்றக்குனித்தாரிடமென்பர்
விழவினோசையடியார்மிடைவுற்றுவிரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந்நீரயர்வெய்தமுழங்கும்புகலூரே. (௬)

வெள்ளமார்ந்துமிளிர்செஞ்சடைதன்மேல்விளங்கும்மதிசூடி
யுள்ளமார்ந்தவடியார்தொழுதேத்தவுகக்கும்மருள்தந்தெங்
கள்ளமார்ந்துகழியப்பழிதீர்த்தகடவுட்கிடமென்பர்
புள்ளையார்ந்தவயலின்விளைவால்வளமல்கும்புகலூரே. (௭)

தென்னிலங்கையரையன்வரைபற்றியெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிரலானெரிவித்திசைகேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடையான்மடமாதொடுமேவும்மிடமென்பர்
பொன்னிலங்குமணிமாளிகைமேன்மதிதோயும்புகலூரே. (௮)

நாகம்வைத்தமுடியானடிகைதொழுதேத்துமடியார்க
ளாகம்வைத்தபெருமான்பிரமன்னொடுமாலுந்தொழுதேத்த
வேகம்வைத்தவெரியாய்மிகவோங்கியவெம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழிலின்னிழலான்மதுவாரும்புகலூரே. (௯)

செய்தவத்தர்மிகுதேரர்கள்சாக்கியர்செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழியைத்தவிர்வார்கள்கடவுளிடம்போலுங்
கொய்துபத்தர்மலரும்புனலுங்கொடுதூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல்வாருயர்வானகமெய்தும்புகலூரே. (௰)

புற்றில்வாழுமரவம்மரையார்த்தவன்மேவும்புகலூரைக்
கற்றுநல்லவவர்காழியுள்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றுமிசைபாடியமாந்தர்பரமனடிசேர்ந்து
குற்றமின்றிக்குறைபாடொழியாப்புகழோங்கிப்பொலிவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இதுவுஞ்சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-அக்கினீசுவரர்-தேவியார்-கருந்தார்க்குழலியம்மை.

---

(திருவலிதாயம்-பண்-நட்டபாடை.)
திருச்சிற்றம்பலம்.

பத்தரோடுபலரும்பொலியம்மலரங்கைப்புனல்தூவி
யொத்தசொல்லியுலகத்தவர்தாந்தொழுதேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெருமான்பிரியாதுறைகின்றவலிதாயஞ்
சித்தம்வைத்தவடியாரவர்மேலடையாமற்றிடர்நோயே. (௧)

படையிலங்குகரமெட்டுடையான்படிறாகக்கனலேந்திக்
கடையிலங்குமனையிற்பலிகொண்டுணுங்கள்வனுறைகோயில்
மடையிலங்குபொழிலின்னிழல்வாய்மதுவீசும்வலிதாய
மடையநின்றவடியார்க்கடையாவினையல்லற்றுயர்தானே. (௨)

ஐயனொய்யனணியன்பிணியில்லவரொன்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடையேந்தவல்லான்றிருமாதோடுறைகோயில்
வையம்வந்துபணியப்பிணிதீர்த்துயர்கின்றவலிதாய
முய்யும்வண்ணநினைமின்னினைந்தால்வினைதீருந்நலமாமே. (௩)

ஒற்றையேறதுடையானடமாடியோர்பூதப்படைசூழப்
புற்றினாகமரையார்த்துழல்கின்றவெம்பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுலகத்தொளிமல்கிடவுள்கும்வலிதாயம்
பற்றிவாழுமதுவேசரணாவதுபாடும்மடியார்க்கே. (௪)

புந்தியொன்றிநினைவார்வினையாயினதீரப்பொருளாய
வந்தியன்னதொருபேரொளியானமர்கோயிலயலெங்கு
மந்திவந்துகடுவனொடுகூடிவணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதவவர்தம்மடும்வெந்துயர்தீர்தலெளிதன்றே. (௫)

ஊனியன்றதலையிற்பலிகொண்டுலகத்துள்ளவரேத்தக்
கானியன்றகரியினுரிபோர்த்துழல்கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறைவைத்தவெம்மாதிமகிழும்வலிதாயந்
தேனியன்றநறுமாமலர்கொண்டுநின்றேத்தத்தெளிவாமே. (௬)

கண்ணிறைந்தவிழியின்னழலால்வருகாமனுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொருபால்மகிழ்வெய்தியபெம்மானுறைகோயில்
மண்ணிறைந்தபுகழ்கொண்டடியார்கள்வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்தபெருமான்கழலேத்தநம்முன்னமக்கதியாமே. (௭)

கடலினஞ்சமமுதுண்டிமையோர்தொழுதேத்தநடமாடி
யடலிலங்கையரையன்வலிசெற்றருளம்மானமர்கோயில்
மடலிலங்குகமுகின்பலவின்மதுவிம்மும்வலிதாய
முடலிலங்குமுயிருள்ளளவுந்தொழவுள்ளத்துயர்போமே. (௮)

பெரியமேருவரையேசிலையாமலைவுற்றாரெயில்மூன்று
மெரியவெய்தவொருவன்னிருவர்க்கறிவொண்ணாவடிவாகு
மெரியதாகியுறவோங்கியவன்வலிதாயந்தொழுதேத்த
வுரியராகவுடையார்பெரியாரெனவுள்கும்முலகோரே. (௯)

ஆசியார்மொழியாரமண்சாக்கியரல்லாதவர்கூடி
யேசியீரமிலராய்மொழிசெய்தவர்சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரவடியார்க்கருள்செய்துவளர்ந்தான்வலிதாயம்
பேசுமார்வமுடையாரடியாரெனப்பேணும்பெரியோரே. (௰)

வண்டுவைகும்மணமல்கியசோலைவளரும்வலிதாயத்
தண்டவாணனடியுள்குதலாலருமாலைத்தமிழாகக்
கண்டல்வைகுகடற்காழியுள்ஞானசம்பந்தன்றமிழ்பத்துங்
கொண்டுவைகியிசைபாடவல்லார்குளிர்வானத்துயர்வாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் தொண்டைநாட்டில் பாடியென
வழங்கப் பட்டிருக்கின்றது.
சுவாமிபெயர் - வலிதாயநாதர் - தேவியார் - தாயம்மை.

---

(ஸ்ரீபுகலியும்-திருவீழிமிழலையும்-வினாவுரை-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

மைம்மரும்பூங்குழற்கற்றைதுற்றவாணுதல்மான்விழிமங்கையோடும்
பொய்ம்மொழியாமறையோர்களேத்தப்புகலிநிலாவியபுண்ணியனே
யெம்மிறையேயிமையாதமுக்கணீசவெனேசவிதென்கொல்சொல்லாய்
மெய்ம்மொழிநான்மறையோர்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

கழன்மல்குபந்தோடம்மானைமுற்றில்கற்றவர்சிற்றிடைக்கன்னிமார்கள், பொழின்மல்குகிள்ளையைச்சொற்பயிற்றும்புகலிநிலாவியபுண்ணியனே, யெழின்மலரோன்சிரமேந்தியுண்டோரின்புறுசெல்வமிதென்கொல்சொல்லாய், மிழலையுள்வேதியரோத்திவாழ்த்தவிண்ணிழிகோயில்விரும்பியதே.

கன்னியராடல்கலந்துமிக்ககந்துகவாடைகலந்துதுங்கப், பொன்னியல்மாடநெருங்குசெல்வப்புகலிநிலாவியபுண்ணியனே, இன்னிசையாழ்மொழியாளோர்பாகத்தெம்மிறையேயிதுவென்கொல்சொல்லாய் மின்னியல்நுண்ணிடையார்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

நாகபணந்திகழல்குல்மல்குநன்னுதல்மான்விழிமங்கையோடும்
பூகவளம்பொழில்சூழ்ந்தவந்தண்புகலிநிலாவியபுண்ணியனே
ஏகபெருந்தகையாயபெம்மானெம்மிறையேயிதுவென்கொல்சொல்லாய், மேகமுரிஞ்செயில்சூழ்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

சந்தளறேறுதடங்கொள்கொங்கைத்தையலோடுந்தளராதவாய்மைப்
புந்தியினூர்மறையோர்களேத்தும்புகலிநிலாவியபுண்ணியனே, எந்தமையாளுடையீசவெம்மானெம்மிறையே யிதுவென்கொல்சொல்லாய், வெந்தவெண்ணீறணிவார்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

சங்கொளியிப்பிசுறாமகரந்தாங்கிநிரந்துதரங்கமேன்மேற், பொங்கொலிநீர்சுமந்தோங்குசெம்மைப்புகலிநிலாவியபுண்ணியனே, எங்கள்பிரானிமையோர்கள்பெம்மானெம்மிறையேயிதுவென் கொல்சொல்லாய், வெங்கதிர்தோய்பொழில்சூழ்மிழலை விண்ணிழிகோயில்விரும்பியதே. (௬)

காமனெரிப்பிழம்பாகநோக்கிக்காம்பனதோளியொடுங்கலந்து
பூமருநான்முகன்போல்வரோத்தப்புகலிநிலாவியபுண்ணியனே
ஈமவனத்தெரியாட்டுகந்தவெம்பெருமானிதுவென் கொல்சொல்லாய்
வீமருதண்பொழில்சூழ்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே. (௭)

இலங்கையர்வேந்தெழில்வாய்த்ததிண்டோளிற்றலறவ்விரலொற்றியைந்து, புலங்களைக்கட்டவர்போற்றவந்தண் புகலிநிலாவியபுண்ணியனே, இலங்கெரியேந்திநின்றெல்லியாடுமெம்மிறையேயிதுவென்கொல்சொல்லாய், விலங்கலொண்மாளிகைசூழ்மிழலை விண்ணிழிகோயில்விரும்பியதே. (௮)

செறிமுளரித்தவிசேறியாறுஞ்சேற்றதில்வீற்றிருந்தானுமற்றைப்
பொறியரவத்தணையானுங்காணாப் புகலிநிலாவியபுண்ணியனே, எறிம
ழுவோடிளமான்கையின்றியிருந்தபிரானிதுவென்கொல்சொல்லாய்
வெறிகமழ்பூம்பொழில்சூழ்மிழலைவிண்ணிழிகோயில் விரும்பியதே.

பத்தர்கணம்பணிந்தேத்தவாய்த்தபான்மையதன்றியும்பல்சமணும்
புத்தருநின்றலர்தூற்றவந்தண்புகலிநிலாவியபுண்ணியனே, யெத்தவ
த்தோர்க்குமிலக்காய்நின்ற வெம்பெருமானிதுவென் கொல்சொல்லா
ய்,வித்தகர்வாழ்பொழில்சூழ்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.

விண்ணிழிகோயில்விரும்பிமேவும் வித்தகமென் கொலிதென்று
சொல்லிப், புண்ணியனைப்புகலிந்நிலாவுபூங்கொடியோடிருந்தானை
ப்போற்றி, நண்ணியகீர்த்திநலங்கொள்கேள்விநான்மறைஞானசம்ப
ந்தன்சொன்ன, பண்ணியல்பாடல்வல்லார்களிந்தப்பாரொடுவிண்ப
ரிபாலகரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இவ்விரண்டுஞ் சோழநாட்டிலுள்ளவை-புகலி-என்பது
சீகாழிக்கொருபெயர்.

வீழிமிழலையில்-சுவாமிபெயர் வீழியழகர்-தேவியார்-சுந்தரகுசாம்பிகை.

---

(திருக்காட்டுப்பள்ளி-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

செய்யருகேபுனல்பாயவோங்கிச்செங்கயல்பாயச்சிலமலர்த்தேன்
கையருகேகனிவாழையீன்றுகானமெல்லாங்கமழ்காட்டுப்பள்ளி
பையருகேயழல்வாய்வவாயப்பாம்பணையான்பணைத்தோளிபாக
மெய்யருகேயுடையானையுள்கிவிண்டவரேறுவர்மேலுலகே. (௧ - ௨)

திரைகளெல்லாமலருஞ்சுமந்து செழுமணிமுத்தொடுபொன்வரன்றிக்
கரைகளெல்லாமணிசேர்ந்துரிஞ்சிக்காவிரிகால்பொருகாட்டுப்பள்ளி
யுரைகளெல்லாமுணர்வெய்திநல்கவுத்தமராயுயர்ந்தாருலகி
லரவமெல்லாமரையார்த்தசெல்வர்க்காட்செயவல்லலறுக்கலாமே.(௩)

தோலுடையான்வண்ணப்போர்வையினான்சுண்ணவெண்ணீறு
துதைந்திலங்கு, நூலுடையானிமையோர்பெருமானுண்ணறிவால்வ
ழிபாடுசெய்யுங், காலுடையான்கரிதாயகண்டன்காதலிக்கப்படுங்கா
ட்டுப்பள்ளி, மேலுடையானிமையாதமுக்கண்மின்னிடையாளொடு
ம்வேண்டினனே. (௪)

சலசலசந்தகிலோடுமுந்திச்சந்தனமேகரைசார்த்தியெங்கும், பலபல
வாய்த்தலையார்த்துமண்டிப்பாய்ந்திழிகாவிரிப்பாங்கரின்வாய்க், கல

கலநின்றதிருங்கழலான்காதலிக்கப்படுங்காட்டுப்பள்ளிச், சொலவல்
லதொண்டர்களேத்தநின்றசூலம்வல்லான்கழல்சொல்லுவோமே.(௫)

தளையவிழ்தண்ணிறநீலநெய்தல்தாமரைசெங்கழுநீருமெல்லாங்
களையவிழுங்குழலார்கடியக்காதலிக்கப்படுங்காட்டுப்பள்ளித்
துளைபயிலுங்குழலியாழ்முரலத்துன்னியவின்னிசையாற்றுதைந்து
அளைபயில்பாம்பரையார்த்தசெல்வர்க்காட்செய்யவல்லலறுக்கலாமே

முடிகையினாற்றொடுமோட்டுழவர்முன்கைத்தருகைக்கரும்பின்கட்டி
கடிகையினாலெறிகாட்டுப்பள்ளிகாதல்செய்தான்கரிதாயகண்டன்
பொடியணிமேனியினானையுள்கிப்போதொடுநீர்சுமந்தேத்தி[illegible]முன்னின்
றடிகையினாற்றொழவல்லதொண்டரருவினையைத்துரந்[illegible]

பிறையுடையான்பெரியோர்கள்பெம்மான்பெய்கழ[illegible]
ம்பேணியேத்த, மறையுடையான்மழுவாளுடையான் வார்த[illegible]நாக
டனஞ்சமுண்ட, கறையுடையான்கனலாடுகண்ணாற்காமனைக்காய்ந்த
வன்காட்டுப்பள்ளி, குறையுடையான் குறட்பூதச்செல்வன் குரைகழ
லேகைகள்கூப்பினோமே. (௮)

செற்றவர்தம்மரணம்மவற்றைச்செவ்வழல்வாயெரியூட்டிநன்றுங்
கற்றவர்தாந்தொழுதேத்தநின்றான்காதலிக்கப்படுங்காட்டுப்பள்ளி
யுற்றவர்தாமுணர்வெய்திநல்லவும்பருள்ளார்தொழுதேத்தநின்ற
பெற்றமரும்பெருமானையல்லால்பேசுவதும்மற்றோர்பேச்சிலோமே

ஒள்ளவரார் துகிலாடைமெய்ப்போர்த்துச்சிகொளாமையுண்டேயுராக்
குந், குண்டர்களோடராக்கூறையில்லார்கூறுவதாங்குணமல்லகண்டீ
ரண்டமறையவன்மாலுங்காணாவாதியினானுறைகாட்டுபள்ளி, வண்ட
மரும்மலர்க்கொன்றைமாலைவார்சடையான்கழல்வாழ்த்துவோமே.()

பொன்னியல்தாமரைநீலநெய்தல்போதுகளாற்பொலிவெய்துபொய்
கைக்,கன்னியர்தாங்குடைகாட்டுப்பள்ளிக்காதலனைக்கடற்காழியர்கோ
ன், றுன்னியவின்னிசையாற்றுதைந்துசொல்லியஞானசம்பந்தனல்ல
தன்னிசையாற்சொன்னமாலைபத்துந்தாங்கவல்லார்புகழ்தாங்குவாரே.

திருச்சிற்றம்பலம்.

இதுவுஞ் சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-ஆரணியச்சுந்தரர்-தேவியார் அகிலாண்டநாயகி.

ஆ பதிகம் - ௫.

---

(திருமருகலுந் திருச்செங்காட்டங்குடியும் வினவுரை-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

அங்கமும்வேதமுமோதுநாவரந்தணர்நாளுமடிபரவ
மங்குல்மதிதவழ்மாட வீதிமருகல்நிலாவியமைந்தசொல்லாய்
செங்கயலார்புனற்செல்வமல்குசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
கங்குல்விளங்கெரியேந்தியாடுங்கணபதீச்சரங்காமுறவே. (க)

நெய்தவழ்மூவெரிகாவலோம்புநேர்புரிநூல்மறையாளரோத்த
மைதவழ்மாடமலிந்தவீதிமருகல்நிலாவியமைந்தசொல்லாய் [னுட்
செய்தவநான்மறையோர்களேத்துஞ் சீர்கொள்செங்காட்டங்குடியத
கைதவழ்கூரெரியேந்தியாடுங்கணபதீச்சரங்காமுறவே. (உ)

தோலொடுநூலிழைசேர்ந்தமார்பர்தொகுமறையோர்கள்வளர்த்தசெ
ந்தீ. [illegible]ல்புகைபோய்விம்முமாடவீதிமருகல்நிலாவியமைந்தசொல்
லா[illegible]சல்புல்குதண்வயற்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங்குடி
யதனுட், கால்புல்குபைங்கழலார்க்கவாடுங்கணபதீச்சரங்காமுறவே. ங

நாமருகேள்வியர்வேள்வியோவாநான்மறையோர்வழிபாடுசெய்ய
மாமருவும்மணிக்கோயில்மேயமருகல்நிலாவியமைந்தசொல்லாய்
தேமருபூம்பொழிற்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங்குடியதனு
ட், காமருசீர்மகிழ்ந்தெல்லியாடுங்கணபதீச்சரங்காமுறவே. (ச)

பாடல்முழவும்விழவுமோவாப்பன்மறையோரவர்தாம்பரவ
மாடநெடுங்கொடிவிண்டடவுமருகல்நிலாவியமைந்தசொல்லாய்
சேடகமாமலர்ச்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங்குடியதனுட்
காடகமேயிடமாகவாடுங்கணபதீச்சரங்காமுறவே. (ரு)

புனையழலோம்புகையந்தணாளர்பொன்னடிநாடொறும் போற்றிசை
ப்ப, மனைகெழுமாடமலிந்தவீதிமருகல்நிலாவியமைந்தசொல்லாய்
சினைகெழுதண்வயற்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்டங் குடியதனு
ட், கனைவளர்கூரெரியேந்தியாடுங்கணபதீச்சரங்காமுறவே. (சு-எ)

பூண்டங்குமார்பினிலங்கைவேந்தன் பொன்னெடுந்தோள்வரை
யாலடர்த்து, மாண்டங்குநூல்மறையோர்பரவமருகல்நிலாவியமைந்
தசொல்லாய், சேண்டங்குமாமலர்ச்சோலைசூழ்ந்தசீர்கொள்செங்காட்
டங்குடியதனுட், காண்டங்குதோள்பெயர்ந்தெல்லியாடுங்கணபதீச்
சரங்காமுறவே. (அ)

அந்தமுமாதியு நான்முகனுமரவணையானுமறிவரிய
மந்திரவேதங்களோது நாவர்மருகல்நிலாவியமைந்தசொல்லாய் [ட்
செந்தமிழீசர்கள்பரவியேத்துஞ்சீர்கொள்செங்காட்டங்குடியதனு
கந்தமகிற்புகையேகமழுங்கணபதீச்சரங்காமுறவே. (௯)

இலைமருதேயழகாகநாளுமிடுவர்க்காயொடுசுக்குத்தின்னு
நிலையமண்டேரரைநீங்கநின்றுநீதரல்லார்தொழுமா * மருகல்
மலைமகள்தோள்புணர்வாயருளாய்மாகில்செங்காட்டங்குடியதனுட்
கலைமல்குதோலுடுத்தெல்லியாடுங்கணபதீச்சரங்காமுறவே. (௰)

நாலுங்குலைக்கமுகோங்குகாழிஞானசம்பந்தனலர்திகழு
மாலின்மதிதவழ்மாடமோங்குமருகலின்மற்றதன்மேன்மொழிந்த
சேலுங்கயலுந்திளைத்தகண்ணார்சீர்கொள் * செங்காட்டங்குடியதனு
ட், சூலம்வல்லான்கழலேத்துபாடல்சொல்லவல்லார்வினையில்லையாமே

திருச்சிற்றம்பலம்.

இவைகளுஞ் சோழநாட்டிலுள்ளவை.

* சுவாமிபெயர்-மாணிக்கவண்ணர்-தேவியார்-வண்டுவார்குழலி.

* கணபதீசுவரர்-தேவியார்-திருக்குழல்நாயகி

---

(திருநள்ளாறுந் திருஆலவாயும்-வினாவுரை-பண்-நட்டபாடை)

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப்பாவையோடும்படுபிணக்காடிடப்பற்றிநின்று
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடந்தைமார்கள்துணைவரொடுந்தொழுதேத்திவாழ்த்த
வாடகமாடநெருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௧)

திங்களம்போதுஞ்செழும்புனலுஞ் செஞ்சடைமாட்டயல்வைத்துக
ந்து, நங்கள்மகிழுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொ
ல்லாய், பொங்கிளமென்முலையார்களோடும்புனமயிலாடநிலாமுளைக்
கு, மங்களகச்சுதைமாடக்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௨)

தண்ணறுமத்தமுங்கூவிளமும்வெண்டலைமாலையுந்தாங்கியார்க்கு
நண்ணலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
புண்ணியவாணருமாதவரும்புகுந்துடனேத்தப்புனையிழையா
ரண்ணலின்பாடலெடுக்குங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௩)

பூவினில்வாசம்புனலிற்பொற்புப் புதுவிரைச்சாந்தினினாற்றத்தோடு
நாவினிற்பாடனள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லா
ய், தேவர்கள்தானவர்சித்தர்விச்சாதரர்கணத்தோடுஞ்சிறந்துபொங்கி
× யாவினிலைந்துகந்தாட்டுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௪)

---

× ஆவினிலைந்து - பஞ்சகவ்வியம்.

செம்பொன்செய்மாலையும்வாசிகையுந் திருந்துபுகையுமவியும்பாட்டு
நம்பும்பெருமைநள்ளாறுடைய நம்பெருமானிதுவென்கொல்சொல்
உம்பருநாகருலகந்தானு மொலிகடல்சூழ்ந்தவுலகத்தோரும் [லாய்
அம்பதநால்களானீடுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (ரு)

பாகமுந்தேவியைவைத்துக்கொண்டு பைவிரித்திட்டரியபேழ்வாய்
நாகமும்பூண்டநள்ளாறுடைய நம்பெருமானிதுவென்கொல்சொல்
லாய், போகமுநின்னைமனத்துவைத்துப்புண்ணியர்நண்ணும்புணர்வு
பூண்ட, வாகமுடையவர்சேருங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. ௬

கோவணவாடையுநீறுபூச்சுங்கொடுமழுவேந்தலுஞ்செஞ்சடையு
நாவணப்பாட்டுநள்ளாறுடைய நம்பெருமானிது வென்கொல்சொல்
பூவணமேனியிளையமாதர்பொன்னுமணியுங்கொழித்தெடுத்த [லாய்
தாவணவீதியிலாடுங்கூடலாலவாயிற்கணமர்ந்தவாறே. (எ)

இலங்கையிராவணன்வெற்பெடுக்கவெழில்விரலூன்றியிசைவிரும்பி
நலங்கொளச்சேர்ந்தநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொ
ல்லாய், புலன்களைச்செற்றுப்பொறியைநீக்கிப்புந்தியிலுநினைச்சந்தி
செய்யு, மலங்கனல்லார்களமருங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. அ

பணியுடைமாலுமலரினோனும்பன்றியும்வென்றிப்பறவையாயு
நணுகலரியநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
மணியொலிசங்கொலியோடுமற்றைமாமுரசின்னொலியென்றுமோ
வா, தணிகிளர்வேந்தர்புகுதுங்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (கூ)

தடுக்குடைக்கையருஞ்சாக்கியருஞ்சாதியில்நீங்கியவத்தவத்தர்
நடுக்குறநின்றநள்ளாறுடைய நம்பெருமானிதுவென்கொல்சொல்லா
யெடுக்கும்விழவுநன்னாள்விழவுமிரும்பலியின்பின்னோடெத்திசையு
மடுக்கும்பெருமைசேர்மாடக்கூடலாலவாயின்கணமர்ந்தவாறே. (௰)

அன்புடையானையரனைக்கூடலாலவாய்மேவியதென்கொலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானை நயம்பெறப்போற்றிநலங்குலாவு
பொன்புடைசூழ்தருமாடக்காழிப் பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
வின்புடைப்பாடல்கள்பத்தும்வல்லாரிமையவரேத்தவிருப்பர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

திருநள்ளாறு - சோழநாட்டிலுள்ளது. [மை.
சுவாமிபெயர்-தெர்ப்பாரணியேசுவரர் - தேவியார்-போகமார்த்தபூண்முலையம்

(திரு ஆவூர்ப்பசுபதீச்சரம்-பண்-சுட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

புண்ணியர்பூதியர்பூதநாதர்புடைபடுவார்தம்மனத்தார்திங்கட்
கண்ணியரென்றென்றுகாதலாளர்கைதொழுதேத்தவிருந்தவூராம்
விண்ணுயர்மாளிகைமாடவீதிவிரைகமழ்சோலைசுலாவியெங்கும்
பண்ணியல்பாடலறாதவாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௧)

முத்தியர்மூப்பிலராப்பினுள்ளார்முக்கணர்தக்கன்றம்வேள்விசாடு
மத்தியரொன்றென்றடியரோத்துமையனணங்கொடிருந்தவூராந்
தொத்தியலும்பொழில்மாடுவண்டு துதைந்தெங்குந்துமதுப் பாயக்
கோயிற், பத்திசைபாடலறாதவாவூர்ப்பசுபதிச்சரம்பாடுநாவே. (௨)

பொங்கிவரும்புனல்சென்னிவைத்தார் போய்வழிவந்திழிவேற்றமானா
ரிங்குயர்ஞானத்தர்வானோரேத்துமிறையவரின்றுமிருந்தவூராந்
தெங்குயர்சோலைசேராலைசாலிதிளைக்கும்விளைவயல்சேரும்பொய்கை
ப், பங்கயமங்கைவிரும்புமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௩)

தேவியோர்கூறினரேறதேறுஞ்செலவினர்நல்குரவென்னைநீக்கு
மாவியரந்தணரல்லல்தீர்க்குமப்பனாரங்கேயமர்ந்தவூராம்
பூவியலும்பொழில்வாசம்வீசப்புரிகுழலார்சுவடொற்றிமுற்றப்
பாவியல்பாடலறாதவாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௪)

இந்தணையுஞ்சடையார்விடையாரிப்பிறப்பென்னையறுக்கவல்லார்
வந்தணைந்தின்னிசைபாடுவார்பால்மன்னினர்மன்னியிருந்தவூராங்
கொந்தணையுங்குழலார்விழவிற்கூட்டமிடையிடைசேரும்வீதிப்
பந்தணையும்விரலார்தமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௫)

குற்றமறுத்தார்குணத்தினுள்ளார்கும்பிடுவார்தமக்கன்புசெய்வா
ரொற்றைவிடையினர் நெற்றிக்கண்ணா ருறைபதியாகுஞ்செறிகொள்
சுற்றியவாசலின்மாதர்விழாச்சொற்கவிபாடநிதானநல்கப் [மாடஞ்,
பற்றியகையினர்வாழுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௬)

நீறுடையார்நெடுமால்வணங்குநிமிர்சடையார்நினைவார்தமுள்ளங்
கூறுடையாருடைக்கோவணத்தார்குவலயமேத்தவிருந்தவூராந்
தாறுடைவாழையிற்கூழைமந்திதகுகனியுண்டுமீண்டிட்டினத்தைப்
பாறிடப்பாய்ந்துபயிலுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௭)

வெண்டலைமாலைவிரவிப்பூண்டமெய்யுடையார்விறலாரரக்கன்
வண்டமர்பூமுடிசெற்றுகந்தமைந்தரிடம்வளமோங்கியெங்குந்

கண்டலர்சிந்தைக்கருத்தின்மிக்காகதியருளென்றுகை யாரக்கூப்பிப்
பண்டலர்கொண்டுபயிலுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (அ)

மாலுமயனும்வணங்கிநேடமற்றவருக்கெரியாகிநீண்ட
சீலமறிவரிதாகிநின்றசெம்மைபினாரவர்சேருமூராங்
கோலவிழாவினரங்கதேறிக்கொடியிடைமாதர்கள்மைந்தரோடும்
பாலெனவேமொழிந்தேத்துமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௯)

பின்னியதாழ்சடையார்பிதற்றும்பேதையராஞ்சமண்சாக்கியர்கள்
தன்னியலும்புரைகொள்ளகில்லாச்சைவரிடந்தளவேறுசோலைத்
துன்னியமாதருமைந்தர்தாமுஞ்சுனையிடைமூழ்கித்தொடர்ந்தசிந்தை
ப், பன்னிபபாடல்பயிலுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே. (௰)

எண்டிசையாரும்வணங்கியேத்துமெம்பெருமானை யெழில்கொளாவூ
ர்ப், பண்டிரியாச்சிலர்தொண்டர்போற்றும்பசுபதீச்சரத்தாதிதன்மே
ற், கண்டல்கண்மிண்டியகானற்காழிக்கவுணியன் ஞானசம்பந்தன் சொ
ன்ன, கொண்டினிதாவிசைபாடியாடிக்கூடுமவருடையார்கள்வானே.

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பசுபதீச்சுரர்-தேவியார்-மங்களநாயகி.

---

(திருவேணுபுரம்-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

வண்டார்குழலரிவையொடும்பிரியாவகைபாகம்
பெண்டான்மிகவானான்பிறைச்சென்னிப்பெருமானூர்
தண்டாமரைமலராளுறைதவளந்நெடுமாடம்
விண்டாங்குவபோலும்மிகுவேணுபுரமதுவே. (௧)

படைப்புந்நிலைபிறுதிப்பயன்பருமையொடுநேர்மை
கிடைப்பல்கணமுடையான்கிறிபூதப்படையானூர்
குடைப்பூம்பளையின்கமுகின்றெடுபுன்னைமலர்நாற்றம்
விடைதேவருதென்றல்மிகுவேணுபுரமதுவே. (௨)

கடந்தாங்கியகரியையவர்வெருவவுரிபோர்த்துப்
படந்தாங்கியவரவக்குழைப்பரமேட்டிதன்பழவூர்
நடந்தாங்கியநடையாநலபவளத்துவர்வாய்மேல்
விடந்தாங்கியகண்ணார்பயில்வேணுபுரமதுவே. (௩)

தக்கன்றனசிரமொன்றினையரிவித்தவன்றனக்கு
மிக்கவ்வரமருள்செய்தவெம்விண்ணோர்பெருமானூர்
பக்கம்பலமயிலாடிடமேகம்முழவதிர
மிக்கம்மதுவண்டார்பொழில்வேணுபுரமதுவே. (௪)

நானாவிதவுருவாய்நமையாள்வானணுகாதார்
வானார்திரிபுரமூன்றெரியுண்ணச்சிலைதொட்டான்
றேனார்ந்தெழுகதலிக்கனியுண்பான்றிகழ்மந்தி
மேனோக்கிநின்றிரங்கும்பொழில்வேணுபுரமதுவே. (௫)

மண்ணோர்களும்விண்ணோர்களும்வெருவிமிகவஞ்சக்
கண்ணார்சலமூடிக்கடலோங்கவ்வுயர்ந்தானூர்
தண்ணார்நறுங்கமலம்மலர்சாயவ்விளவாளை
விண்ணோர்துதிகொள்ளும்வியன்வேணுபுரமதுவே. (௬ ௭)

மலையான்மகளஞ்சவ்வரையெடுத்தவ்வலியரக்கன்
றலைதோளவைநெரியச்சரணுகிர்வைத்தவன்றன்னூர்
கலையாறொடுசுருதித்தொகைகற்றோர்மிகுகூட்டம்
விலையாயினசொற்றேர்தருவேணுபுரமதுவே. (௮)

வயமுண்டவமாலும்மடிகாணாதலமாக்கும்
பயனாகியபிரமன்படுதலையேந்தியபரனூர்
கயமேவியசங்கந்தருகழிவிட்டுயர்செந்நெல்
வயன்மேவிவந்துறங்கும்பொழில்வேணுபுரமதுவே. (௯)

மாசேறியவுடலாரமண்கழுக்களொடுதேரர்
தேசேறியபாதம்வணங்காமைத்தெரியானூர்
தூசேறியவல்குற்றுடியிடையார்துணைமுலையார்
வீசேறியபுருவத்தவர்வேணுபுரமதுவே. (௰)

வேதத்தொலியானம்மிகுவேணுபுரந்தன்னைப்
பாதத்தினின்மனம்வைத்தெழுபந்தன்றனபாடல்
ஏதத்தினையில்லாவிவைபத்தும்மிசைவல்லார்
கேதத்தினையில்லார்சிவகெதியைப்பெறுவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

வேணுபுரம் - என்பது சீகாழிக்கொருபெயர்.

(திருஅண்ணாமலை-பண்-நட்டபாடை)

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே. (௧)

தேமாங்கனிகடுவன்கொளவிடுகொம்பொடுதீண்டித்
தூமாமழைதுறுவன்மிசைசிறுநுண்டுளிசிதற
வாமாம்பிணையணையும்பொழிலண்ணாமலையண்ணல்
பூமாங்கழல்புனைசேவடிநினைவார்வினையிலரே. (௨)

பீலிம்மயில்பெடையோடுறைபொழில்சூழ்கழைமுத்தஞ்
சூலிம்மணிதரைமேனிறைசொரியும்விரிசார
லாலிம்மழைதவழும்பொழிலண்ணாமலையண்ணல்
காலன்வலிதொலைசேவடிதொழுவாரனபுகழே. (௩)

உதிரும்மயிரிடுவெண்டலைகலனாவுலகெல்லா
மெதிரும்பலியுணலாகவுமெருதேறுவதல்லால்
முதிருஞ்சடையிளவெண்பிறைமுடிமேல்கொளவடிமே
லதிருங்கழலடிகட்கிடமண்ணாமலையதுவே. (௪)

மரவஞ்சிலைதரளம்மிகுமணியுந்துவெள்ளருவி
யரவஞ்செயமுரவம்படுமண்ணாமலையண்ண
லுரவஞ்சடையுலவும்புனலுடனாவதுமோரார்
குரவங்கமழ்நறுமென்குழலுமைபுல்குதல்குணமே. (௫)

பெருகும்புனலண்ணாமலைபிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனைதுணிவார்பொடியணிவாரதுபருகிக
கருகும்மிடறுடையார்கமழ்சடையார்கழல்பரவி
யுருகும்மனமுடையார்தமக்குறுநோயடையாவே. (௬)

கரிகாலனகுடர்கொள்வனகழுகாடியகாட்டில்
நரியாடியநகுவெண்டலையுதையுண்டவையுருள
வெரியாடியவிறைவர்க்கிடமினவண்டிசைமுரல
வரியாடியகண்ணாளொடுமண்ணாமலையதுவே. (௭)

ஒளிறூபுலியதளாடையனுமையஞ்சுதல்பொருட்டாற்
பிளிறூகுரல்மதவாரணவதனம்பிடித்துரித்து

வெளிறுபடவிளையாடியவிகிர்தன்னிராவணனை
யளறுபடவடர்த்தானிடமண்ணாமலையதுவே. (அ)

விளவார்கனிபடநூறியகடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரைமலர்மேலுறைகேடில்புகழோனு
மளவாவணமழலாகியவண்ணாமலையண்ணல்
தளராமுலைமுறுவல்லுமைதலைவன்னடிசரணே. (கூ)

வேர்வந்துறமாசூர்தரவெயில்நின்றுழல்வாரு
மார்வம்புதைமலிசீவரமறையாவருவாரு
மாரம்பர்தமுரைகொள்ளன்மினண்ணாமலையண்ணல்
கூர்வெண்மழுப்படையானல்கழல்சேர்வதுகுணமே. (௰)

வெம்பந்தியகதிரோனொளிவிலகும்விரிசார
லம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலைதன்னைக்
கொம்புந்துவகுயிலாலுவகுளிர்காழியுள்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதல்தவமே. (௰க)

திருச்சிற்றம்பலம்.

இது நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அருணசலேசுவரர் - தேவியார்-உண்ணாமுலையம்மை.

ஆ பதிகம் - ௰.

---

(திருவீழிமிழலை-பண-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

சடையார்புனலுடையானொருசரிகோவணமுடையான்
படையார்மழுவுடையான்பலபூதப்படையுடையான்
மடமான்விழியுமைமாதிடமுடையானெனையுடையான்
விடையார்கொடியுடையானிடம்வீழிம்மிழலையே. (க)

ஈறாய்முதலொன்றாயிருபெண்ணாண்குணமூன்றாய்
மாறாமறைநான்காய்வருபூதம்மவையைந்தா
யாறார்சுவையேழோசையோடெட்டுத்திசைதானாய்
வேறாயுடனானானிடம்வீழிம்மிழலையே. (உ)

வம்மின்னடியீர்நான்மலரிட்டுத்தொழுதுய்ய
வும்மன்பினொடெம்மன்புசெய்தீசன்னுறைகோயில்
மும்மென்றிசைமுரல்வண்டுகள்கொண்டித்திசையெங்கும்
விம்மும்பொழில்சூழ்தண்வயல்வீழிம்மிழலையே. (ங)

பண்ணும்பதமேழும்பலவோசைத்தமிழவையு
முண்ணின்றதோர்சுவையுமுறுதாளத்தொலிபலவு
மண்ணும்புனலுயிரும்வருகாற்றுஞ்சுடர்மூன்றும்
விண்ணும்முழுதானானிடம்வீழிம்மிழலையே. (௪)

ஆயாதனசமயம்பலவறியாதவந்நெறியின்
றாயானவனுயிர்கட்குமுன்றலையானவன்மறைமுத்
தீயானவன்சிவனெம்மிறைசெல்வத்திருவாரூர்
மேயானவனுறையும்மிடம்வீழிம்மிழலையே. (௫)

கல்லானிழற்கீழாயிடர்காவாயெனவானோ
ரெல்லாமொருதேராயயன்மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்வாயெரிகாற்றீர்க்கரிகோல்வாசுகிநாண்கல்
வில்லாலெயிலெய்தானிடம்வீழிம்மிழலையே. (௬)

கரத்தான்மலிசிரத்தான்கரியுரித்தாயதொர்படத்தான்
புரத்தார்பொடிபடத்தன்னடிபணிமூவர்கட்கோவா
வரத்தான்மிகவளித்தானிடம்வளர்புன்னைமுத்தரும்பி
விரைத்தாதுபொன்மணியீன்றணிவீழிம்மிழலையே. (௭)

முன்னிற்பவரில்லாமுரணரக்கன்வடகயிலை
தன்னைப்பிடித்தெடுத்தான்முடிதடந்தோள்கெடவிரலூன்றிய
பின்னைப்பணிந்தேத்தப்பெருவாள்பேர்கொடுத்த
மின்னிற்பொலிசடையானிடம்வீழிம்மிழலையே. (௮)

பண்டேழுலகுண்டானவைகண்டானுமுன்னறியா
வொண்டீயுருவானானுறைகோயினிறைபொய்கை
வண்டாமரைமலர்மேன்மடவன்னந்நடைபயில
வெண்டாமரைசெந்தாதுதிர்வீழிம்மிழலையே. (௯)

மசங்கற்சமண்மண்டைக்கையர்குண்டக்குணமிலிக
ளிசங்கும்பிறப்பறுத்தானிடமிருந்தேன்களித்திரைத்துப்
பசும்பொற்கிளிகளிமஞ்ஞைகளொளிகொண்டெழுபகலோன்
விசும்பைப்பொலிவிக்கும்பொழில்வீழிம்மிழலையே. (௰)

வீழிம்மிழலைம்மேவியவிகிர்தன்றனைவிநாசேர்
காழிந்நகர்க்கலைஞானசம்பந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசைவல்லார்சொலக்கேட்டாரவரெல்லா
மூழின்வலிவினைபோயிடவுயர்வானடைவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

(திருமுதுகுன்றம்-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

மத்தாவரைநிறுவிக்கடல்கடைந்தவ்விடமுண்ட
தொத்தார்தருமணிநீண்முடிச்சுடர்வண்ணனதிடமாங்
கொத்தார்மலர்குளிர்சந்தகிலொளிர்குங்குமங்கொண்டு
முத்தாறுவந்தடிவீழ்தருமுதுகுன்றடைவோமே (க)

தழையார்வடவியவீதனிற்றவமேபுரிசைவ
னிழையாரிடைமடவாளொடுமினிதாவுறையிடமா
மழைவானிடைமுழவவ்வெழில்வளைவாளுகிரெரிகண்
முழைவாளரிகுமிறும்முயர்முதுகுன்றடைவோமே. (உ)

விளையாததோர்பரிசில்வருபசுபாசவேதனையொண்
டளையாயினதவிரவ்வருள்தலைவன்னதுசார்வாங்
களையார்தருகதிராயிரமுடையவ்வவனோடும்
முளைமாமதிதவழும்முயர்முதுகுன்றடைவோமே. (௩)

சுரர்மாதவர்தொகுகின்னரரவரோடொலைவில்லா
நரரானபன்முனிவர்தொழவிருந்தானிடநலமா
ரரசார்வரவணிபொற்கலனவைகொண்டுபன்னாளு
முரசார்வருமணமொய்ம்புடைமுதுகுன்றடைவோமே. (௪)

அறையார்கழலந்தன்றனையயின்மூவிலையழகார்
கறையார்நெடுவேலின்மிசையேற்றானிடங்கருதில்
மறையாயினபலசொல்லியொண்மலர்சாந்தவைகொண்டு
முறையால்மிகுமுனிவர்தொழுமுதுகுன்றடைவோமே. (௫)

ஏவார்சிலையெயினன்னுருவாகியெழில்விசயற்
கோவாதவின்னருள்செய்தவெம்மொருவற்கிடமுலகிற்
சாவாதவர்பிறவாதவர்தவமேமிகவுடையார்
மூவாதபன்முனிவர்தொழுமுதுகுன்றடைவோமே. (௬)

தழல்சேர்தருதிருமேனியர்சசிசேர்சடைமுடியர்
மழமால்விடைமிகவேறியமறையோனுறைகோயில்
விழவோடொலிமிகுமங்கையர்தகுமாடகசாலை
முழவோடிசைநடமுஞ்செயுமுதுகுன்றடைவோமே. (௭)

செதுவாய்மைகள்கருதிவ்வரையெடுத்ததிறலரக்கன்
கதுவாய்கள்பத்தலறியிடக்கண்டானுறைகோயில்

மழுவாயசெங்காந்தண்மலர்நிறையக்குறையில்லா
முழுவேய்கண்முத்துதிரும்பொழில்முதுகுன்றடைவோமே. (அ)

இயலாடியபிரமன்னரியிருவர்க்கறிவரிய
செயலாடியதீயாருருவாகியெழுசெல்வன்
புயலாடுவண்பொழில்சூழ்புனற்படப்பைத்தடத்தருகே
முயலோடவெண்கயல்பாய்தருமுதுகுன்றடைவோமே. (௯)

அருகரொடுபுத்தரவரறியாவரன்மலையான்
மருகன்வருமிடபக்கொடியுடையானிடமலரார்
கருகுகுழன்மடவார்கடிகுறிஞ்சியதுபாடி
முருகன்னதுபெருமைபகர்முதுகுன்றடைவோமே. (௰)

முகில்சேர்தருமுதுகுன்றுடையானைம்மிகுதொல்சீர்ப்
புகலிந்நகர்மறைஞானசம்பந்தன்னுரைசெய்த
நிகரில்லனதமிழ்மாலைகளிசையோடிவைபத்தும்
பகரும்மடியவர்கட்கிடர்பாவம்மடையாவே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டிலுள்ளது- இதுவேவிருத்தாசலம்.
சுவாமிபெயர்-பழமலைநாதர்-தேவியார்-பெரியநாயகியம்மை.

---

(திருவியலூர்-பண்-நட்டபாடை.)
திருச்சிற்றம்பலம்.

குரவங்கமழ்நறுமென்குழலரிவையவள்வெருவப்
பொருவெங்கரிபடவென்றதனுரிவையுடலணிவோ
னரவும்மலைபுனலும்மிளமதியுந்நகுதலையும்
விரவுஞ்சடையடிகட்கிடம்விரிநீர்வியலூரே. (௧)

ஏறார்தருமொருவன்பலவுருவன்னிலையானா
னாறார்தருசடையன்னனலுருவன்புலியுடையான்
மாறார்புரமெரியச்சிலைவளைவித்தவன்மடவாள்
வீறார்தரநின்றானிடம்விரிநீர்வியலூரே. (௨)

செம்மென்சடையவைதாழ்வுறமடவார்மனைதோறும்
பெய்ம்மின்பலியெனநின்றிசைபகர்வாரவரிடமா
முழும்மென்றெழுமருவித்திரள்வரையற்றிடவுரைமேல்
விம்மும்பொழில்கெழுவும்வயல்விரிநீர்வியலூரே. (௩)

அடைவாகியவடியார்தொழவலரோன்றலையதனின்
மடவாரிடுபலிவந்துணலுடையானவனிடமாங்

(திருக்கொடுங்குன்றம்-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

வானிற்பொலிவெய்தும்மழைமேகங்கிழித்தோடிக்
கூனற்பிறைசேருங்குளிர்சாரற்கொடுங்குன்றம்
ஆனிற்பொலிவைந்தும்மமர்ந்தாடியுலகேத்தத்
தேனிற்பொலிமொழியாளொடுமேயான்றிருநகரே. (௧)

மயில்புல்குதண்பெடையோடுடனாடும்வளர்சாரற்
குயிலின்னிசைபாடுங்குளிர்சோலைக்கொடுங்குன்றம்
அயில்வேல்மலிநெறிவெஞ்சுடரனலேந்திநின்றாடி
யெயின்முன்படவெய்தானவன்மேயவ்வெழினகரே. (௨)

மிளிரும்மணிபைம்பொன்னொடுவிரைமாமலருந்திக்
குளிரும்புனல்பாயுங்குளிர்சாரற்கொடுங்குன்றங்
கிளர்கங்கையொடிளவெண்மதிசெழுவுஞ்சடைதன்மேல்
வளர்கொன்றையுமதமத்தமும்வைத்தான்வளநகரே. (௩)

பருமாமதகரியோடரியிழியும்விரிசாரற்
குருமாமணிபொன்னோடிழியருவிக்கொடுங்குன்றம்
பொருமாவெயில்வரைவிற்றருகணையிற்பொடிசெய்த
பெருமானவனுமையாளொடுமேவும்பெருநகரே. (௪)

மேகத்திடிகுரல்வந்தெழவெருவிவ்வரையிழியுங்
கூகைக்குலமோடித்திரிசாரற்கொடுங்குன்றந்
நாகத்தொடிளவெண்பிறைசூடிந்நலமங்கை
பாகத்தவனிமையோர்தொழமேவும்பழநகரே. (௫)

கைம்மாமதகரியின்னினமிடியின்குரலதிரக்
கொய்ம்மாமலர்ச்சோலைபுகமண்டுங்கொடுங்குன்றம்
அம்மானெனவுள்கித்தொழுவார்கட்கருள்செய்யும்
பெம்மானவனிமையோர்தொழமேவும்பெருநகரே. (௬)

மரவத்தொடுமணமாதவிமவ்வல்லதுவிண்ட
குரவத்தொடுவிரவும்பொழில்சூழ்தண்கொடுங்குன்றம்
அரவத்தொடிளவெண்பிறைவிரவும்மலர்க்கொன்றை
நிரவச்சடைமுடிமேலுடன்வைத்தானெடுநகரே. (௭)

முட்டாமுதுகரியின்னினமுதுவேய்களைமுனிந்து
குட்டாச்சுனையவைமண்டிநின்றாடுங்கொடுங்குன்றம்

ஒட்டாவரக்கன்றன்முடியொருபஃதவையுடனே
பிட்டானவனுமையாளொடுமேவும்பெருநகரே. (அ)

அறையும்மரிகுரலோசையையஞ்சியடிமானை
குறையுட்மனமாகிம்முழைவைகுங்கொடுங்குன்றம்
மறையும்மவையுடையானெனநெடியானெனவிவர்க
ளிறையும்மறிவொண்ணாதவன்மேயவெழினகரே. (௯)

மத்தக்களிறாளிவ்வரவஞ்சிம்மலைதன்னைக்
குத்திப்பெருமுழைதன்னிடைவைகுங்கொடுங்குன்றம்
புத்தரொடுபொல்லாமனச்சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள்செய்தானவன்மேயபழநகரே. (௰)

கூனற்பிறைசடைமேன்மிகவுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழுமலமாநகர்த்தலைவன்னலகவுணி
ஞானத்துயர்சம்பந்தனநலங்கொள்தமிழ்வல்லா
ரூனத்தொடுதுயர்தீர்ந்துலகேத்துமெழிலோரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இது பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-கொடுங்குன்றேசுவரர்- தேவியார்-அமுதவல்லி.

---

(திருநெய்த்தானம் பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

மையாடியகண்டன்மலைமகள்பாகமதுடையான்
கையாடியகேடிற்கரியுரிமூடியவொருவன்
செய்யாடியகுவளைம்மலர்நயனத்தவளோடுந்
நெய்யாடியபெருமானிடநெய்த்தானமெனீரே. (க)

பறையும்பழிபாவம்படுதுயரம்பலதீரும்
பிறையும்புனலரவும்படுசடையெம்பெருமானூ
ரறையும்புனல்வருகாவிரியலைசேர்வடகரைமேல்
நிறையும்புனைமடவார்பயில்நெய்த்தானமெனீரே. (உ)

பேயாயினபாடப்பெருநடமாடியபெருமான்
வேயாயினதோளிக்கொருபாகம்மிகவுடையான்
தாயாகியவுலகங்களைநிலைபேறுசெய்தலைவ
னேயாடியபெருமானிடநெய்த்தானமெனீரே. (௩)

சுடுநீறணியண்ணல்சுடர்சூலம்மனலேந்தி
நடுநள்ளிருணடமாடியநம்பனுறையிடமாந்

கடுவாளிளவரவாடுமிழ்கடனஞ்சமதுண்டா
னெடுவாளைகள்குதிகொள்ளுயர்நெய்த்தானமெனீரே. (௪)

நுகராரமொடேலம்மணிசெம்பொன்னுரையுந்திப்
பகராவருபுனல்காவிரிபரவிப்பணிந்தேத்துந்
நிகரான்மணலிடுதண்கரைநிகழ்வாயநெய்த்தான
நகரானடியேத்தநந்நமைநடலையடையாவே. (௫)

விடையார்கொடியுடையவ்வணல்வீந்தார்வெளையெலும்பும்
உடையார்நறுமாலைச்சடையுடையாரவர்மேய
புடையேபுனல்பாயும்வயல்பொழில்சூழ்தணெய்த்தானம்
மடையாதவரோன்றும்மருலகம்மடையாரே. (௬)

நிழலார்வயல்கமழ்சோலைகணிறைகின்றநெய்த்தானத்
தழலானவனனலங்கையிலேந்தியழகாய
கழலானடிநாளுங்கழலாதேவிடலின்றித்
தொழலாரவர்நாளுந்துயரின்றித்தொழுவாரே. (௭)

அறையார்கடலிலங்கைக்கிறையணிசேர்கயிலாய
மிறையாரமுனெடுத்தானிருபதுதோளுநலூன்றி
நிறையார்புனனெய்த்தானநன்னிகழ்சேவடிபரவக்
கறையார்கதிர்வாளீந்தவர்கழலேத்துதல்கதியே. (௮)

கோலம்முடிநெடுமாலொடுகொய்தாமரையானுஞ்
சீலம்மறிவரிதாயொளிநிகழ்வாயநெய்த்தானங்
காலம்பெறமலர்நீரவைதூவித்தொழுதேத்தும்
ஞாலம்புகழடியாருடலுறுநோய்நலியாவே. (௯)

மத்தம்மலிசித்தத்திறைமதியில்லவர்சமணர்
புத்தரவர்சொன்னம்மொழிபொருளாநினையேன்மி
னித்தம்பயினிமலன்னுறைநெய்த்தானமதேத்துஞ்
சித்தம்முடையடியாருடல்செறுநோயடையாவே. (௰)

தலமல்கியபுனற்காழிபுட்டமிழ்ஞானசம்பந்தன்
நிலமல்கியபுகழான்மிகுநெய்த்தானனைநிகரில்
பலமல்கியபாடல்லிவைபத்தும்மிகவல்லார்
சிலமல்கியசெல்வன்னடிசேர்வர்சிவகதியே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-நெய்யாடியப்பர்- தேவியார்-வாலாம்பிகையம்மை.

௲ பதிகம் - ௰௫.

(திருப்புள்ளமங்கை திரு ஆலந்துறை பண்-நட்டபாடை)

திருச்சிற்றம்பலம்.

பாலுந்துறுதிரளாயினபரமன்பிரமன்றான்
போலுந்திறலவர்வாழ்தருபொழில்சூழ்புளமங்கைக்
காலன்றிறலறச்சாடியகடவுள்ளிடங்கருதி
லாலந்துறைதொழுவார்தமையடையாவினைதானே. (க)

மலையான்மகள்கணவன்மலிகடல்சூழ்தருதன்மைப்
புலையாயினகளைவானிடம்பொழில்சூழ்புளமங்கைக்
கலையால்மலிமறையோரவர்கருதித்தொழுதேத்த
அலையார்புனல்வருகாவிரியாலந்துறையதுவே. (உ)

கறையார்மிடறுடையான்கமழ்கொன்றைச்சடைமுடிமேற்
பொறையார்தருகங்கைப்புனலுடையான்புளமங்கை
சிறையார்தருகளிவண்டறைபொழிற்சூழ்திருவாலந்
துறையானவனறையார்கழல்தொழுமின்றுதிசெய்தே. (ங)

தணியார்மதியரவின்னொடுவைத்தானிடமொய்த்தெம்
பணியாலவனடியார்தொழுதேத்தும்புளமங்கை
மணியார்தருகனகம்மவைவயிரத்திரளோடும்
மணியார்மணலணைகாவிரியாலந்துறையதுவே. (ச)

மெய்த்தன்னுறும்வினைதீர்வகைதொழுமின்செழுமலரின்
கொத்தின்னொடுசந்தாரகில்கொணர்காவிரிக்கரைமேற்
பொத்தின்னிடையாந்தைபலபாடும்புளமங்கை
யத்தன்னமையாள்வானிடமாலந்துறையதுவே. (ரு)

மன்னானவனுலகிற்கொருமழையானவன்பிழையில்
பொன்னானவன்முதலானவன்பொழில்சூழ்புளமங்கை
யென்னானவனிசையானவனிளநாயிறின்சோதி
யன்னானவனுறையும்மிடமாலந்துறையதுவே. (சா)

முடியார்தருசடைமேன்முளையிளவெண்மதிசூடிப்
பொடியாடியதிருமேனியர்பொழில்சூழ்புளமங்கைக்
கடியார்மலர்புனல்கொண்டுதன்கழலேதொழுதேத்து
மடியார்தமக்கினியானிடமாலந்துறையதுவே. (எ)

இலங்கைமன்னன்முடிதோளிறவெழிலார்திருவிரலால்
விலங்கல்லிடையடர்த்தானிடம்வேதம்பயின்றேத்திப்
புலன்கள்தமைவென்றார்புகழவர்வாழ்புளமங்கை
யலங்கன்மலிசடையானிடமாலந்துறையதுவே. (அ)

செறியார்தருவெள்ளைத்திருநீற்றின்றிருமுண்டப்
பொறியார்தருபுரிநூல்வரைமார்பன்புளமங்கை
வெறியார்தருகமலத்தயன்மாலுந்தனைநாடி
யறியாவகைநின்றானிடமாலந்துறையதுவே. (௯)

நீதியறியாதாரமண்கையரொடுமண்டைப்
போதியவரோதும்முரைகொள்ளார்புளமங்கை
யாதியவர்கோயில்திருவாலந்துறைதொழுமின்
சாதிம்மிகுவானோர்தொழுதன்மைபெறலாமே. (௰)

பொந்தின்னிடைத்தேனூறியபொழில்சூழ்புளமங்கை
யந்தண்புனல்வருகாவிரியாலந்துறையானைக்
கந்தம்மலிகமழ்காழியுட்கலைஞானசம்பந்தன்
சந்தம்மலிபாடல்சொலியாடத்தவமாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-பசுபதிநாயகர்-தேவியார்-பால்வளைநாயகி.

---

(திருஇடும்பாவனம்-பண் நட்டபாடை.)
திருச்சிற்றம்பலம்.

மனமார்தருமடவாரொடுமகிழ்மைந்தர்கள்மலர்தூய்த்
தனமார்தருசங்கக்கடல்வங்கத்திரளுந்திச்
சினமார்தருதிறல்வாளெயிற்றரக்கன்மிகுகுன்றில்
இனமாதவரிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௧)

மலையார்தருமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
நிலையார்தருநிமலன்வலிநிலவும்புகழொளிசேர்
கலையார்தருபுலவோரவர்காவன்மிகுகுன்றில்
இலையார்தருபொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (௨)

சீலம்மிகுசித்தத்தவர்சிந்தித்தெழுமெந்தை
ஞாலம்மிகுகடல்சூழ்தருமுலகத்தவர்நலமார்
கோலம்மிகுமலர்மென்குழல்மடவார்மிகுகுன்றில்
ஏலங்கமழ்பொழில்சூழ்தருமிடும்பாவனமிதுவே. (௩)

பொழிலார்தருகுலைவாழைக ளெழிலார்திகழ்போழ்தின்
றொழிலான்மிகுதொண்டரவர்தொழுதாடியமுன்றிற்
குழலார்தருமலர்மென்முலைமடவார்மிகுகுன்றில்
எழிலார்தருமிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௪)

பந்தார்விரலுமையாளொருபங்கர்கங்கைமுடிமேற்
செந்தாமரைமலர்மல்கியசெழுநீர்வயற்கரைமேற்
கொந்தார்மலர்புன்னைமகிழ்குரவங்கமழ்குன்றில்
எந்தாயெனவிருந்தானிடமிடும்பாவனமிதுவே. (௫)

நெறிநீர்மையர்நீள்வானவர்நினையுந்நினைவாகி
யறிநீர்மையிலெய்துமவர்க்கறியும்மறிவருளிக்
குறிநீர்மையர்குளமார்தருமணமார்தருகுன்றில்
எறிநீர்வயல்புடைசூழ்தருமிடும்பாவனமிதுவே. (௬)

நீறேறியதிருமேனியர்நிலவும்முலகெல்லாம்
பாறேறியபடுவெண்டலைகையிற்பலிவாங்காக்
கூறேறியமடவாளொருபாகம்மகிழ்வெய்தி
யேறேறியவிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௭)

தேரார்தருதிகழ்வாளெயிற்றரக்கன்சிவன்மலையை
யோராதெடுத்தார்த்தான்முடியொருபஃதவைநெரித்துக்
கூரார்தருகொலைவாளொடுகுணநாமமுங்கொடுத்த
வேரார்தருமிறைவர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௮)

பொருளார்தருமறையோர்புகழ்விருத்தர்பொலிமலிசீர்த்
தெருளார்தருசிந்தையொடுசந்தம்மலர்பலதூய்
மருளார்தருமாயன்னயன்காணார்மயலெய்த
விருளார்தருகண்டர்க்கிடமிடும்பாவனமிதுவே. (௯)

தடுக்கையுடனிடுக்கித்தலைபறித்துச்சமண்டப்பர்
உடுக்கைபலதுவர்க்கூறைகளுடம்பிட்டுழல்வாரும்
மடுக்கண்மலர்வயல்சேர்செந்நெல்மலிநீர்மலர்க்கரைமேல்
இடுக்கண்பலகளைவானிடமிடும்பாவனமிதுவே. (௰)

கொடியார்நெடுமாடக்குன்றளூரிற்கரைக்கோல
விடியார்கடலடிவீழ்தருமிடும்பாவனத்திறையை
யடியாயுமந்தணர்காழியுளணிஞானசம்பந்தன்
படியார்சொன்னபாடல்சொலப்பறையும்வினைதானே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சற்குணநாதர்- தேவியார்-மங்களநாயகி.

(திருநின்றியூர்-பண்-நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

சூலம்படைசுண்ணப்பொடிசாந்தஞ்சுடுநீறு
பாலம்மதிபவளச்சடைமுடிமேலது பண்டைக்
காலன்வலிகாலினொடுபோக்கிக்கடிகமழுந்
நீலம்மலர்ப்பொய்கைநின்றியூரினிலையோர்க்கே. (க)

அச்சம்மிலர்பாவம்மிலர்கேடும்மிலரடியார்
நிச்சம்முறுநோயும்மிலர்தாமுந்நின்றியூரில்
நச்சும்மிடறுடையார்நறுங்கொன்றைநயந்தார்நாம்
பச்சம்முடையடிகள்திருப்பாதம்பணிவாரே. (உ)

பறையின்னொலிசங்கின்னொலிபாங்காரவுமார
அறையும்மொலியெங்கும்மவையறிவாரவர்தம்மை
நிறையும்புனல்சடைமேலுடையடிகணின்றியூரில்
உறையும்மிறையல்லதெனதுள்ளம்முணராதே. (ங)

பூண்டவ்வரைமார்பிற்புரிநூலன்விரிகொன்றை
யீண்டவ்வதனோடும்மொருபாலம்மதியதனைத்
தீண்டும்பொழில்சூழ்ந்ததிருநின்றியதுதன்னில்
ஆண்டகழல்தொழிலல்லதுவறியாரவரறிவே. (ச)

குழலின்னிசைவண்டின்னிசைகண்டுகுயில்கூவுந்
நிழலின்னெழில்தாழ்ந்தபொழில்சூழ்ந்தநின்றியூரில்
அழலின்வலனங்கையதுவெய்தியனலாடுங்
கழலின்னொலியாடும்புரிகடவுள்களைகண்ணே. (ரு)

மூரல்முறுவல்வெண்ணகையுடையாளொருபாகஞ்
சாரன்மதியதனோடுடன்சலவஞ்சடைவைத்த
வீரன்மலியழகார்பொழின்மிடையுந்திருநின்றி
யூரன்கழலல்லாதெனதுள்ளமுணராதே. (சா)

பற்றியொருதலைகையினிலேந்திப்பலிதேரும்
பெற்றியதுவாகித்திரிதேவர்பெருமானார்
சுற்றியொருவேங்கையதளோடும்பிறைசூடுந்
நெற்றியொருகண்ணார்நின்றியூரினிலையாரே. (எ - அ)

நல்லமலர்மேலானொடுஞாலம்மதுவுண்டான்
அல்லரெனவாவாரெனநின்றும்மறிவரிய

தரையொடுதிவிதலநலிதருதகுதிறலுறுசலதரனது
வரையனதலைவிசையொடுவருதிகிரியையரிபெறவருளின
னுரைமலிதருசுரநதிமதிபொதிசடையவனுறைபதிமிகு
திரைமலிகடன்மணலணிதருபெறுதிடர்வளர்திருமிழலையே. (௨)

மலைமகடனையிகழ்வதுசெய்தமதியறுசிறுமனவனதுயர்
தலையினொடழலுருவனகரமறமுனிவுசெய்தவனுறைபதி
கலைநிலவியபுலவர்களிடர்களைதருகொடைபயில்பவர்மிகு
சிலைமலிமதிள்புடைதழுவியதிகழ்பொழில்வளர்திருமிழலையே. (௩)

மருவலர்புரமெரியினின்மடிதரவொருகணைசெலநிறுவிய
பெருவலியினனலமலிதருகரனுரமிகுபிணமமர்வன
விருளிடையடையுறவொடுநடவிசையுறுபரனினிதுறைபதி
தெருவினில்வருபெருவிழவொலிமலிதரவளர்திருமிழலையே. (௪)

அணிபெறுவடமரநிழலினிலமர்வொடுமடியிணையிருவர்கள்
பணிதரவறநெறிமறையொடுமருளியபரனுறைவிடமொளி
மணிபொருவருமரகதநிலமலிபுனலணைதருவயலணி
திணிபொழில்தருமணமதுநுகரறுபதமுரல்திருமிழலையே. (௫)

வசையறுவலிவனசரவுருவதுகொடுநினைவருதவமுயல்
விசையன்றிறன்மலைமகளறிவுறுதிறலமர்மிடல்கொடுசெய்து
அசைவிலபடையருள்புரிதருமவனுறைபதியதுமிகுதரு
திசையினின்மலர்குலவியசெறிபொழின்மலிதருதிருமிழலையே. (௬)

நலமலிதருமறைமொழியொடுநதியுறுபுனல்புகையொளிமுதன்
மலரவைகொடுவழிபடுதிறன்மறையவனுயிரதுகொளவரு
சலமலிதருமறலிதனுயிர்கெடவுதைசெய்தவரனுறைபதி
திலகமிதெனவுலகுகள்புகழ்தருபொழிலணிதிருமிழலையே. (௭)

அரனுறைதிருகயிலையைநிலைகுலைவதுசெய்ததசமுகனது
கரமிருபதுநெரிதரவிரல்நிறுவியகழலடியுடையவன்
வரன்முறையுலகவைதருமலர்வளர்மறையவன்வழிவழுவிய
சிரமதுகொடுபலிதிரிதருசிவனுறைபதிதிருமிழலையே. (௮)

அயனொடுமெழிலமர்மலர்மகள்மகிழ்கணனளவிடவொழியவொர்
பயமுறுவகைதழல்நிகழ்வதொர்படியுருவதுவரவரன்முறை
சயசயவெனமிகுதுதிசெயவெளியுருவியவவனுறைபதி
செயநிலவியமதின்மதியதுதவழ்தரவுயர்திருமிழலையே. (௯)

இகழுருவொடுபரிசிலதொழின்மலிசமண்விரகினர்
திகழ்துவருடையுடல்பொதிபவர்கெடவடியவர்மிகவருளிய
புகழுடையிறையுறைபதிபுனலணிகடல்புடைதழுவியபுவி
திகழ்சுரர்தருநிகர்கொடையினர்செறிவொடுதிகழ்திருமிழலையே. (௰)

சினமலிகரியுரிசெய்தசிவனுறைதருதிருமிழலையைமிகு
தனமனர்சிரபுரநகரிறைதமிழ்விரகனதுரையொருபது
மனமகிழ்வொடுபயில்பவரெழின்மலர்மகள்கலைமகள்சயமக
ளினமலிபுகழ்மகளிசைதரவிருநிலனிடையினிதமர்வரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருச்சிவபுரம் - திருவிராகம் - பண் - நட்டபாடை.)

திருச்சிற்றம்பலம்.

புவம்வளிகனல்புனல்புவிகலையுரைமறைதிரிகுணமமர்நெறி
திவமலிதருசுரர்முதலியர்திகழ்தருமுயிரவையவைதம
பவமலிதொழிலதுநினைவொடுபதுமநன்மலரதுமருவிய
சிவனதுசிவபுரநினைபவர்செழுநிலனினினிலைபெறுவரே. (௧)

மலைபலவளர்தருபுவியிடைமறைதருவழிமலிமனிதர்கள்
நிலைமலிசுரர்முதலுலகுகணிலைபெறுவகைநினைவொடுமிகு
மலைகடனடுவறிதுயிலமரரியுருவியல்பரனுறைபதி
சிலைமலிமதிள்சிவபுரநினைபவர்திருமகளொடுதிகழ்வரே. (௨)

பழுதிலகடல்புடைதழுவியபடிமுதலியவுலகுகள்மலி
குழுவியசுரர்பிறர்மனிதர்கள்குலமலிதருமுயிரவையவை
முழுவதுமழிவகைநினைவொடுமுதலுருவியபரனுறைபதி
செழுமணியணிசிவபுரநகர்தொழுமவர்புகழ்மிகுமுலகிலே. (௩)

நறைமலிதருமளறொடுமுகைநகுமலர்புகைமிகுவளரொளி
நிறைபுனல்கொடுதனைநினைவொடுநியதமும்வழிபடுமடியவர்
குறைவிலபதமணைதரவருள்குணமுடையிறையுறைவனபதி
சிறைபுனலமர்சிவபுரமதுநினைபவர்செயமகடலைவரே. (௪)

சினமலியறுபகைமிகுபொறிசிதைதருவகைவளிநிறுவிய
மனனுணர்வொடுமலர்மிசையெழுதருபொருணியதமுமுணர்பவர்
தனதெழிலுருவதுகொடுவடைதகுபரனுறைவதுநகர்மதிள்
கனமருவியசிவபுரநினைபவர்கலைமகடரநிகழ்வரே. (௫)

கரமுதலியவவயவமவைகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடல்வலிமிகுபுலியதளுடையின
னிரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவளர்
மரநிகர்கொடைமனிதர்கள்பயில்மறைவனமமர்தருபரமனே. (உ)

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசிவொடுமெழமுளரியொடெழு
கழைநுகர்தருகரியிரிதருகயிலையின்மலிபவனிருளுறு
மழைதவழ்தருபொழினிலவியமறைவனமமர்தருபரமனே. (ங)

நலமிகுதிருவிதழியின்மலர்நகுதலையொடுகனகியின்முகை
பலசுரநதிபடவரவொடுமதிபொதிசடைமுடியினன்மிகு
தலநிலவியமனிதர்களொடுதவமுயல்தருமுனிவர்கடம
மலமறுவகைமனநினைதருமறைவனமமர்தருபரமனே. (ச)

கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தவதிகுணனுயர்பசு
பதியதன்மிசைவருபசுபதிபலகலையவைமுறைமுறையுணர்
விதியறிதருநெறியமர்முனிகணனொடுமிகுதவமுயல்தரு
மதிநிபுணர்கள்வழிபடவளர்மறைவனமமர்தருபரமனே. (ரு)

கறைமலிதிரிசிகைபடையடல்கனல்மழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடைதலைமுகிழ்மலிகணிவடமுக்
முறைதருகரனுலகினிலுயரொளிபெறுவகைநினைவொடுமலர்
மறையவன்மறைவழிவழிபடுமறைவனமமர்தருபரமனே. (சு)

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவெளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
விருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே. (எ)

சனம்வெருவுறவருதசமுகனொருபதுமுடியொடுமிருபது
கனமருவியபுயநெரிவகைகழலடியிலோர்விரனிறுவின
னினமலிகணநிசிசரன்மகிழ்வுறவருள்செய்தகருணையனென
மனமகிழ்வொடுமறைமுறையுணர்மறைவனமமர்தருபரமனே. (அ)

அணிமலர்மகடலைமகனயனறிவரியதோர்பரிசினிலெரி
திணிதருதிரளுருவளர்தரவவர்வெருவுறலொடுதுதிசெய்து
பணிபுறவெளியுருவியபரனவனுறைமலிகடல்திரளெழு
மணிவளரொளிவெயின்மிகுதருமறைவனமமர்தருபரமனே. (கூ)

இயல்வழிதரவிதுசெலவுறவினமயிலிறகுறுதழையொடு
செயன்மருவியசிறுகடமுடியடைகையர்தலைபறிசெய்துதவ
முயல்பவர்துவர்படமுடல்பொதிபவரறிவருபரனவனணி
வயலினில்வளைவளமருவியமறைவனமமர்தருபரமனே. (௰)

வசையறுமலர்மகணிலவியமறைவனமமர்பரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவர்கள்புகழ்வழிவளர்தரு
விசையமர்கழுமலநகரிறைதமிழ்விரகனதுரையியல்வல
விசைமலிதமிழொருபதும்வலவருலகினிலெழில்பெறுவரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மறைக்காட்டீசுரர் - தேவியார்-யாழைப்பழித்தமொழியம்மை.

---

(திருக்கோலக்கா-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீ
ழுடையுங்கொண்டவுருவமென்கொலோ. (௧)

பெண்டான்பாகமாகப்பிறைச்சென்னிக்
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
யுண்டானஞ்சையுலகமுய்யவே. (௨)

பூணற்பொறிகொளரவம்புன்சடைக்
கோணற்பிறையன்குழகன்கோலக்கா
மாணப்பாடிமறைவல்லானையே
பேணப்பறையும்பிணிகளானவே. (௩)

தழுக்கொள்பாவந்தளரவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
விழுக்காவண்ணமேத்திவாழ்மினே. (௪)

மயிலார்சாயன்மாதோர்பாகமா
வெயிலார்சாயவெரித்தவெந்தைதன்
குயிலார்சோலைக்கோலக்காவையே
பயிலாநிற்கப்பறையும்பாவமே (௫)

வெடிகொள்வினையைவீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றைகலந்தசென்னியான்
கொடிகொள்விழவார்கோலக்காவுளெம்
மடிகள்பாதமடைந்துவாழ்மினே. (சு)

நிழலார்சோலைநீலவண்டினங்
குழலார்பண்செய்கோலக்காவுளான்
கழலான்மொய்த்தபாதங்கைகளாற்
றொழலார்பக்கற்றுயரமில்லையே. (எ)

எறியார்கடல்சூழிலங்கைக்கோன்றன்னை
முறியார்தடக்கையடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய்கோலக்காவையே
நெறியாற்றொழுவார்வினைகணீங்குமே. (அ)

நாற்றமலர்மேலயனுநாகத்தி
லாற்றலணைமேலவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்தகுழகன்கோலக்கா
வேற்றான்பாதமேத்திவாழ்மினே. (கூ)

பெற்றமாசுபிறக்குஞ்சமணரு
முற்றதுவர்தோயுருவிலாளருங்
குற்றநெறியார்கொள்ளார்கோலக்காப்
பற்றிப்பரவப்பறையும்பாவமே. (ய)

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சத்தபுரீசர்-தேவியார்-ஓசைகொடுத்தநாயகி.

(சீகாழி-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

பூவார்கொன்றைப்புரிபுன்சடையீர்
காவாயெனநின்றேத்துங்காழியார்
மேவார்புரமூன்றட்டாரவர்போலாம்
பாவாரின்சொற்பயிலும்பரமரே. (க)

எந்தையென்றங்கிமையோர்புகுந்தீண்டிக்
கந்தமாலைகொடுசேர்காழியார்
வெந்தநீற்றர்விமலரவர்போலா
மந்திநட்டமாடுமடிகளே. (௨)

தேனையென்றமொழியாளொருபாகங்
கானமான்கைக்கொண்டகாழியார்
வானமோங்குகோயிலவர்போலா
மானவின்பமாடுமடிகளே. (௩)

மாணுமென்றிக்காலன்மடியவே
காணுமாணிக்களித்தகாழியார்
நாணார்வாளிதொட்டாரவர்போலாம்
பேணார்புரங்களட்டபெருமானே. (௪)

மாடேயோதமெறியவயற்செந்நெற்
காடேறிச்சங்கீனுங்காழியார்
வாடாமலராள்பங்கரவர்போலா
மேடார்புரமூன்றெரித்தவிறைவரே. (௫)

கொங்குசெருந்திகொன்றைமலர்கூடக்
கங்கைபுனைந்தசடையார்காழியா
ரங்கணரவமாட்டுமவர்போலாஞ்
செங்கணரக்கர்புரத்தையெரித்தாரே. (௬)

கொல்லைவிடைமுன்பூதங்குனித்தாடுங்
கல்லவடத்தைபுகப்பார்காழியா
ரல்லவிடத்துநடந்தாரவர்போலாம்
பல்லவிடத்தும்பயிலும்பரமரே. (௭)

எடுத்தவரக்கனெரியவிரலூன்றிக்
கடுத்துமுரியவடர்த்தார்காழியா
ரெடுத்தபாடற்கிரங்குமவர்போலாம்
பொடிக்கொணீறுபூசும்புனிதரே. (௮)

ஆற்றலுடையவரியும்பிரமனுந்
தோற்றங்காணவென்றிக்காழியா
ரேற்றமேறங்கேறுமவர்போலாங்
கூற்றமறுகக்குமைத்தகுழகரே. (௯)

பெருக்கப்பிதற்றுஞ்சமணர்சாக்கியர்
கரக்கும்முரையைவிட்டார்காழியா
ரிருக்கின்மலிந்தவிறைவரவர்போலா
மருப்பின்முலையாள்பங்கத்தையரே. (௰)

காரார்வயல்சூழ்காழிக்கோன்றனைச்
சீரார்ஞானசம்பந்தன்சொன்ன
பாராரபுகழப்பரவவல்லவ
ரோரார்வானத்தினிதாவிருப்பாரே. (௰க)

திருச்சிற்றம்பலம்.

---

(திருச்செம்பொன்பள்ளி-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

மருவார்குழலிமாதோர்பாகமாய்த்
திருவார்செம்பொன்பள்ளிமேவிய
கருவார்கண்டத்தீசன்கழல்களை
மருவாதவர்மேன்மன்னும்பாவமே. (க)

வாரார்கொங்கைமாதோர்பாகமாய்ச்
சீரார்செம்பொன்பள்ளிமேவிய
வேரார்புரிபுன்சடையெம்மீசனைச்
சேராதவர்மேற்சேரும்வினைகளே. (உ)

வரையார்சந்தோடகிலும்வருபொன்னித்
திரையார்செம்பொன்பள்ளிமேவிய
நரையார்விடையொன்றூருநம்பனை
யுரையாதவர்மேலொழியாவூனமே. (௩)

மழுவாளேந்திமாதோர்பாகமாய்ச்
செழுவார்செம்பொன்பள்ளிமேவிய
வெழிலார்புரிபுன்சடையெம்மிறைவனைத்
தொழுவார்தம்மேற்றுயரமில்லையே (௪)

மலையான்மகளோடுடனாய்மதிளெய்த
சிலையாற்செம்பொன்பள்ளியானையே
யிலையான்மலர்கொண்டெல்லிநண்பகல்
நிலையாவணங்கநில்லாவினைகளே. (௫)

அறையார்புனலோடகிலும்வருபொன்னிச்
சிறையார்செம்பொன்பள்ளிமேவிய
கறையார்கண்டத்தீசன்கழல்களை
நிறையால்வணங்கநில்லாவினைகளே. (சா)

பையாரரவேரல்குலாளொடுஞ்
செய்யார்செம்பொன்பள்ளிமேவிய
கையார்சூலமேந்துங்கடவுளை
மெய்யால்வணங்கமேவாவினைகளே. (எ)

வானாதிங்கள்வளர்புன்சடைவைத்துத்
தேனார்செம்பொன்பள்ளிமேவிய
ஆனார்தலையிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
யானன்கழலேயடைந்துவாழ்மினே. (அ)

காரார்வண்ணன்கனகமனையானுந்
தேரார்செம்பொன்பள்ளிமேவிய
நீரார்நிமிர்புன்சடையெந்நிமலனை
யோராதவர்மேலொழியாவூனமே. (கூ)

மாசாருடம்பர்மண்டைத்தேரரும்
பேசாவண்ணம்பேசித்திரியவே
தேசார்செம்பொன்பள்ளிமேவிய
வீசாவென்னநில்லாவிடர்களே. (ய)

நறவார்புகலிஞானசம்பந்தன்
செறுவார்செம்பொன்பள்ளிமேயானைப்
பெறுமாறிசையாற்பாடலிவைபத்து
முறுமாசொல்லவோங்கிவாழ்வரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சொர்ணபுரீசர்-தேவியார்-சுகந்தவனநாயகி.

---

(திருப்புத்தூர்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்மூவெறியார்பொழிற்சோலைத்
திங்களோடுதிளைக்குந்திருப்புத்தூர்
கங்கைதங்குமுடியாரவர்போலு
மெங்களுச்சியுறையுமிறையாரே. (க)

வேனல்விம்மு வெறியார்பொழிற்சோலைத்
தேனும்[illegible]நிந் திளைக்குந் திருப்புத்தூ
ரூனமின்றி யுறைவா ரவர்போலு
மேனமுள்ளு மெயிறும் புனைவாரே. (௨)

பாங்கு நல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூ
ரோங்குகோயி லுறைவா ரவர்போலுந்
தாங்கு திங்க டவழ்புன் சடையாரே. (௩)

நாறவிண்ட நறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டு திளைக்குந் திருப்புத்தூ
ரூறல்வாழ்க்கை யுடையா ரவர்போலு
மேறுகொண்ட கொடியெம் மிறையாரே. (௪)

இசைவிளங்குமெழிற்சூழ்ந் தியல்பாகத்
திசைவிளங்கு பொழில்சூழ் திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப் படித்தா ரவர்போலும்
வசைவிளங்கும் வடிசேர் நுதலாரே. (௫)

வெண்ணிறத்த விரையோடலருந்தித்
தெண்ணிறத்த புனல்பாய் திருப்புத்தூ
ரொண்ணிறத்த வொளியா ரவர்போலும்
வெண்ணிறத்த விடைசேர் கொடியாரே. (௬)

நெய்தலாம்பல் கழுநீர்மலர்ந்தெங்குஞ்
செய்கண்மல்கு சிவனார் திருப்புத்தூர்த்
தையல்பாக மகிழ்ந்தா ரவர்போலு
மையுணஞ்ச மருவு மிடற்றாரே. (௭)

கருக்கமெல்லாங் கமழும் பொழிற்சோலைத்
திருக்கொள் செம்மை விழவார் திருப்புத்தூ
ரிருக்க வல்ல விறைவ ரவர்போலு
மரக்க னொல்க விரலா லடர்த்தாரே. (௮)

மருவியெங்கும் வளருமடமஞ்ஞை
தெருவுதோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்
பெருகிவாழும் பெருமா னவன்போலும்
பிரமன்மாலு மறியாப் பெரியோனே. (௯)

கூறைபோர்க்குந்தொழிலாரமண்கூறல்
தேறல்வேண்டாதெளிமின்திருப்புத்தூ
ராறுநான்குமமர்ந்தாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௰)

நல்லகேள்விஞானசம்பந்தன்
செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்
சொல்லப்பாடல்வல்லார்தமக்கென்று
மல்லல்தீருமவலமடையாவே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-புத்தூரீசர்-தேவியார்-சிவகாமியம்மை.

ஆ பதிகம்-௨௬.

---

(திருப்புன்கூர்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

முந்திநின்றவினைகளவைபோகச்
சிந்திநெஞ்சேசிவனார்திருப்புன்கூ
ரந்தமில்லாவடிகளவர்போலுங்
கந்தமல்குகமழ்புன்சடையாரே. (௧)

மூவராயமுதல்வர்முறையாலே
தேவரெல்லாம்வணங்குந்திருப்புன்கூ
ராவரென்னுமடிகளவர்போலு
மேவினல்லாரெயில்மூன்றெரித்தாரே. (௨)

பங்கயங்கள்மலரும்பழனத்துச்
செங்கயல்கள்திளைக்குந்திருப்புன்கூர்க்
கங்கைதங்குசடையாரவர்போலு
மெங்களுச்சியுறையுமிறையாரே. (௩)

கரையுலாவுகதிர்மாமணிமுத்தந்
திரையுலாவுவயல்சூழ்திருப்புன்கூ
ருரையினல்லபெருமானவர்போலும்
விரையினல்லமலர்ச்சேவடியாரே. (௪)

பவளவண்ணப்பரிசார்திருமேனி
திகழும்வண்ணமுறையுந்திருப்புன்கூ
ரழகரென்னுமடிகளவர்போலும்
புகழநின்றபுரிபுன்சடையாரே. (௫)

தெரிந்திலங்குகழுநீர்வயற்செந்நெல்
திருந்தநின்றவயல்சூழ்திருப்புன்கூர்ப்
பொருந்திநின்றவடிகளவர்போலும்
விரிந்திலங்குசடைவெண்பிறையாரே. (௬)

பாரும்விண்ணும்பரவித்தொழுதேத்தும்
நேர்கொள்நீதிவிழவார்திருப்புன்கூ
ராரநின்றவடிகளவர்போலுங்
கூரநின்றவெயின்மூன்றெரித்தாரே (௭)

மலையதனாருடையமதின்மூன்றுஞ்
சிலையதனாலெரித்தார்திருப்புன்கூர்த்
தலைவர்வல்லரக்கன்றருக்கினை
மலையதனாலடர்த்துமகிழ்ந்தாரே. (௮)

நாடவல்லமலரானுமாலுமாய்த்
தேடநின்றாருறையுந்திருப்புன்கூ
ராடவல்லவடிகளவர்போலும்
பாடலாடல்பயிலும்பரமரே. (௯)

குண்டுமுற்றிக்கூறையின்றியே
பிண்டமுண்ணும்பிராந்தர்சொற்கொள்ளேல்
வண்டுபாடமலரார்திருப்புன்கூர்க்
கண்டுதொழுமின்கபாலிவேடமே. (௰)

மாடமல்குமதில்சூழ்காழிமன்
சேடர்செல்வருறையுந்திருப்புன்கூர்
நாடவல்லஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பரவிவாழ்மினே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-சிவலோகநாதர்-தேவியார்-சொக்கநாயகி.

---

(திருச்சோற்றுத்துறை-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

செப்பநெஞ்சேநெறிகொள்சிற்றின்பந்
துப்பனென்னாதருளேதுணையாக
வொப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௧)

பாலுநெய்யுந்தயிரும்பயின்றாடித்
தோலுநூலுந்துதைந்தவரைமார்பர்
மாலுஞ்சோலைபுடைசூழ்மடமஞ்ஞை
யாலுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௨)

செய்யர்செய்யசடையர்விடையூர்வர்
கைகொள்வேலர்கழலர்கரிகாடர்
தையலாளோர்பாகமாயவெம்
மையர்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௩)

பிணிகொளாக்கையொழியப்பிறப்புளீர்
துணிகொள்போரார்துளங்குமழுவாளர்
மணிகொள்கண்டர்மேயவார்பொழி
லணிகொள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௪)

பிறையும்மரவும்புனலுஞ்சடைவைத்து
மறையுமோதிமயானமிடமாக
வுறையுஞ்செல்வமுடையார்காவிரி
யறையுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௫)

துடிகளோடுமுழவம்விம்மவே
பொடிகொள்பூசிப்புறங்காடரங்காகப்
படிகொள்பாணிபாடல்பயின்றாடு
மடிகள்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௬)

சாடிக்காலன்மாளத்தலைமாலை
சூடிமிக்குச்சுவண்டாய்வருவார்தாம்
பாடியாடிப்பரவுவாருள்ளத்
தாடிசோற்றுத்துறைசென்றடைவோமே. (௭)

பெண்ணோர்பாகமுடையார்பிறைச்சென்னிக்
கண்ணோர்பாகங்கலந்தநுதலினா
ரெண்ணாதரக்கனெடுக்கவூன்றிய
வண்ணல்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௮)

தொழுவாரிருவர்துயரநீங்கவே
யழலாயோங்கியருள்கள்செய்தவன்
விழவார்மறுகில்விதியால்மிக்க
வெழிலார்சோற்றுத்துறைசென்றடைவோமே. (௯)

கோதுசாற்றித்திரிவாரமண்குண்ட
ரோதுமோத்தைபுணராதெழுநெஞ்சே
நீதிநின்றுநினைவார்வேடமா
மாதிசோற்றுத்துறைசென்றடைவோமே. (௰)

அந்தண்சோற்றுத்துறையெம்மாதியைச்
சிந்தைசெய்மினடியீராயினீர்
சந்தம்பரவுஞானசம்பந்தன்
வந்தவாறேபுனைதல்வழிபாடே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-தொலையாச்செல்வர்-தேவியார்-ஒப்பிலாம்பிகை.

---

(திருநறையூர்ச்-சித்தீச்சரம-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

ஊருலாவுபலிகொண்டுலகேத்த
நீருலாவுநிமிர்புன்சடையண்ணல்
சீருலாவுமறையோர்நறையூரிற்
சேருஞ்சித்தீச்சரஞ்சென்றடைநெஞ்சே. (௧)

காடுநாடுங்கலக்கப்பலிநண்ணி
யோடுங்கங்கையொளிர்புன்சடைதாழ
வீடமாகமறையோர்நறையூரில்
நீடுஞ்சித்தீச்சரமேநினைநெஞ்சே. (௨)

கல்வியாளர்கனகமழன்மேனி
புல்குகங்கைபுரிபுன்சடையானூர்
மல்குதிங்கட்பொழில்சூழ்நறையூரிற்
செல்வாசித்தீச்சரஞ்சென்றடைநெஞ்சே. (௩)

நீடவல்லநிமிர்புன்சடைதாழ
வாடவல்லவடிகளிடமாகும்
பாடல்வண்டுபயிலுநறையூரிற்
சேடர்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௪)

உம்பராலுமுலகின்னவராலுந்
தம்பெருமைப்பளத்தற்கரியானூர்
நண்புலாவுமறையோர்நறையூரிற்
செம்பொன்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௫)

கூருலாவுபடையான்விடையேறிப்
போருலாவுமழுவாளனலாடி
மேருலாவுபெருமானறையூரிற்
சேருஞ்சித்தீச்சரமேயிடமாமே. (௬)

× அன்றிநின்றவவுணர்புரமெய்த
வென்றிவில்லிவிமலன்விரும்புமூர்
மன்றில்வாசமணமார்நறையூரிற்
சென்றுசித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௭)

அரக்கனொன்மையழியவரைதன்னால்
நெருக்கவூன்றும்விரலான்விரும்புமூர்
பரக்குங்கீர்த்தியுடையார்நறையூரிற்
றிருக்கொள்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. (௮)

ஆழியானுமலரினுறைவானு
மூழிநாடியுணரார்திரிந்துமேற்
சூழுநேடவெரியாமொருவன்சீர்
நீழல்சித்தீச்சரமேநினைநெஞ்சே. (௯)

மெய்யின்மாசர்விரிநுண்டுகிலினார்
கையிலுண்டுகழறுமுரைகொள்ளே
லுய்யவேண்டிலிறைவனறையூரிற்
செய்யுஞ்சித்தீச்சரமேதவமாமே. (௰)

மெய்த்துலாவுமறையோர்நறையூரிற்
சித்தன்சித்தீச்சரத்தையுயர்காழி
யத்தன்பாதமணிஞானசம்பந்தன்
பத்தும்பாடப்பறையும்பாவமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சித்தநாதேசர் - தேவியார்-அழகாம்பிகை.

---

(ஸ்ரீபுகலி-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

விதியாய்வினையாய்விளைவின்பயனாகிக்
கொதியாவருகூற்றையுதைத்தவர்சேரும்
பதியாவதுபங்கயநின்றலரத்தேன்
பொதியார்பொழில்சூழ்புகலிந்நகர்தானே. (௧)

---

× அன்றிநின்ற - பகைத்துநின்ற.

ஒன்னார்புரமூன்றுமெரித்தவொருவன்
மின்னாரிடையாளொடுங்கூடியவேடந்
தன்னாலுறைவாவதுதண்கடல்சூழ்ந்த
பொன்னார்வயற்பூம்புகலிந்நகர்தானே. (உ)

வலியின்மதிசெஞ்சடைவைத்தமணாளன்
புலியின்னதள்கொண்டரையார்த்தபுனிதன்
மலியும்பதிமாமறையோர்நிறைந்தீண்டிப்
பொலியும்புனற்பூம்புகலிந்நகர்தானே. (ங)

கயலார்தடங்கண்ணியொடும்மெருதேறி
யயலாகடையிற்பலிகொண்டவழக
னியலாலுறையுமிடமெண்டிசையோர்க்கும்
புயலார்கடற்பூம்புகலிந்நகர்தானே. (ச)

காதார்கனபொற்குழைதோடதிலங்கத்
தாதார்மலர்தண்சடையேறமுடித்து
× நாதானுறையுமிடமாவதுநாளும்
போதார்பொழிற்பூம்புகலிந்நகர்தானே. (ரு)

வலமார்படைமான்மழுவேந்தியமைந்தன்
கலமார்கடனஞ்சமுதுண்டகருத்தன்
குலமார்பதிகொன்றைகள்பொன்சொரியத்தேன்
புலமார்வயற்பூம்புகலிந்நகர்தானே. (சு)

கறுத்தான்கனலான்மதின்மூன்றையும்வேவச்
செறுத்தான்றிகழுங்கடனஞ்சமுதாக
வறுத்தானயன்றன்சிரமைந்திலுமொன்றைப்
பொறுத்தானிடம்பூம்புகலிந்நகர்தானே. (எ)

தொழிலான்மிகுதொண்டர்கள்தோத்திரஞ்சொல்ல
வெழிலார்வரையாலன்றரக்கனைச்செற்ற
கழலானுறையுமிடங்கண்டல்கண்மிண்டிப்
பொழிலான்மலிபூம்புகலிந்நகர்தானே. (அ)

மாண்டார்சுடலைப்பொடிப்பூசிமயானத்
தீண்டாநடமாடியவேந்தன்றன்மேனி
நீண்டானிருவர்க்கெரியாயரவாரம்
பூண்டானகர்பூம்புகலிந்நகர்தானே. (கூ)

---

× நாதன - நாதான என நீண்டது.

உடையார்துகில்போர்த்துழல்வார்சமண்கைய
ரடையாதனசொல்லுவராதர்களோத்தைக்
கிடையாதவன்றன்னகர்நன்மலிபூகம்
புடையார்தருபுகலிந்நகர்தானே. (௰)

இரைக்கும்புனல்செஞ்சடைவைத்தவெம்மான்றன்
புரைக்கும்பொழிற்பூம்புகலிந்நகர்தன்மே
லுரைக்குந்தமிழ்ஞானசம்பந்தனொண்மாலை
வரைக்குந்தொழில்வல்லவர்நல்லவர்தாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருக்குரங்கணின்முட்டம்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்குங்
கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயுங்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணின்முட்டந்
தொழுநீர்மையர்தீதுறுதுன்பமிலரே. (௧)

விடைசேர்கொடியண்ணல்விளங்குயர்மாடக்
கடைசேர்கருமென்குழல்தொங்கியகாட்டிற்
குடையார்புனல்மல்குகுரங்கணின்முட்ட
முடையானெனையாளுடையெந்தைபிரானே. (௨)

சூலப்படையான்விடையான்சுடுநீற்றான்
காலன்றனையாருயிர்வவ்வியகாலன்
கோலப்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்டத்
தேலங்கமழ்புன்சடையெந்தைபிரானே. (௩)

வாடாவிரிகொன்றைவலத்தொருகாதிற்
றோடார்குழையானலபாலனைநோக்கி
கூடாதனசெய்தகுரங்கணின்முட்ட
மாடாவருவாரவரன்புடையாரே. (௪)

இறையார்வளையாளையோர்பாகத்தடக்கிக்
கறையார்மிடற்றான்கரிகீறியகையான்
குறையார்மதிசூடிகுரங்கணின்முட்டத்
துறைவானெனையாளுடையொண்சுடரானே. (௫)

பலவும்பயனுள்ளனபற்றுமொழிந்தோங்
கலவம்மயில்காமுறுபேடையோடாடிக்
குலவும்பொழில்சூழ்ந்தகுரங்கணின்முட்டந்
நிலவும்பெருமானடிநித்தல்நினைந்தே. (சா)

மாடார்மலர்க்கொன்றைவளர்சடைவைத்துத்
தோடார்குழைதானொருகாதிலங்கக்
கூடார்மதிளெய்துகுரங்கணின்முட்டத்
தாடாரரவம்மரையார்த்தமர்வானே. (எ)

மையார்நிறமேனியரக்கர்தங்கோனை
யுய்யாவகையாலடர்த்தின்னருள்செய்த
கொய்யார்மலர்சூடிகுரங்கணின்முட்டங்
கையாற்றொழுவார்வினைகாண்டலரிதே. (அ)

வெறியார்மலர்த்தாமரையானொடுமாலு
மறியாதசைந்தேத்தவோராரழலாகுங்
குறியானிமிர்ந்தான்றன்குரங்கணின்முட்டந்
நெறியாற்றொழுவார்வினைநிற்ககிலாவே. (கூ)

கழுவார்துவராடைகலந்துமெய்போர்க்கும்
வழுவார்ச்சமண்சாக்கியர்வாக்கவைகொள்ளேல்
குழுமின்சடையண்ணல்குரங்கணின்முட்டத்
தெழில்வெள்ளபிறையானடிசேர்வதியல்வே. (ய)

கல்லார்மதிற்காழிஞானசம்பந்தன்
கொல்லார்மழுவேந்திகுரங்கணின்முட்டஞ்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக
வல்லார்க்கெளிதாம்பிறவாவகைவீடே (யக)

திருச்சிற்றம்பலம்

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வாலீசுவரர்-தேவியார்-இறையார்வளையம்மை.

ஆ பதிகம்-௩௧.

(திரு இடைமருது-பண்-தக்கராகம்)

திருச்சிற்றம்பலம்.

ஓடேகலனுண்பதுமூரிடுபிச்சை
காடேயிடமாவதுகல்லானிழற்கீழ்
வாடாமுலைமங்கையுந்தானுமகிழ்ந்
தீடாவுறைகின்றவிடைமருதீதோ. (க)

தடங்கொண்டதோர்தாமரைப்பொன்முடிதன்மேற்
குடங்கொண்டடியார்குளிர்நீர்சுமந்தாட்டப்
படங்கொண்டதோர்பாம்பரையார்த்தபரம
னிடங்கொண்டிருந்தான்றனிடைமருதீதோ (உ)

வெண்கோவணங்கொண்டொருவெண்டலையேந்தி
யங்கோல்வளையாளையோர்பாகமமர்ந்து
பொங்காவருகாவிரிக்கோலக்கரைமே
லெங்கோனுறைகின்றவிடைமருதீதோ. (௩)

அந்தம்மறியாதவருட்கலமுந்திக்
கந்தங்கமழ்காவிரிக்கோலக்கரைமேல்
வெந்தபொடிப்பூசியவேதமுதல்வ
னெந்தையுறைகின்றவிடைமருதீதோ. (௪)

வாசங்கமழ்மாமலர்ச்சோலையில்வண்டே
தேசம்புகுந்தீண்டியோர்செம்மையுடைத்தாய்ப்
பூசப்புகுந்தாடிப்பொலிந்தழகாய
வீசனுறைகின்றவிடைமருதீதோ. (௫)

வன்புற்றிளநாகமசைத்தழகாக
வென்பிற்பலமாலையும்பூண்டெருதேறி
யன்பிற்பிரியாதவளோடுமுடனா
யின்புற்றிருந்தான்றனிடைமருதீதோ. (௬

தேக்குந்திமிலும்பலவுஞ்சுமந்துந்திப்
போக்கிப்புறம்பூசலடிப்பவருமா
லார்க்குந்திரைக்காவிரிக்கோலக்கரைமே
லேற்கவிருந்தான்றனிடைமருதீதோ. (௭

பூவார்குழலாரகில்கொண்டுபுகைப்ப
வோவாதடியாரடியுள்குளிர்ந்தேத்த
வாவாவரக்கன்றனையாற்றலழித்த
வேவார்சிலையான்றனிடைமருதீதோ. (௮

முற்றாததோர்பான்மதிசூடுமுதல்வ
னற்றாமரையானொடுமால்நயந்தேத்தப்
பொற்றோளியுந்தானும்பொலிந்தழகாக
வெற்றேயுறைகின்றவிடைமருதீதோ. (௯

சிறுதேரருஞ்சிலசமணும்புறங்கூற
நெறியேபலபத்தர்கள்கைதொழுதேத்த
வெறியாவருகாவிரிக்கோலக்கரைமே
லெறியார்மழுவாளனிடைமருதீதோ. (௰)

கண்ணார்கமழ்காழியுண்ஞானசம்பந்த
னெண்ணார்புகழெந்தையிடைமருதின்மேற்
பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்கள்
விண்ணோருலகத்தினில்வீற்றிருப்பாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மருதீசர்-தேவியார்-நலமுலைநாயகி.

---

(திரு அன்பிலாலந்துறை-பண்-தக்கராகம்)

திருச்சிற்றம்பலம்.

கணைநீடெரிமாலரவம்வரைவில்லா
விணையாவெயின்மூன்றுமெரித்தவிறைவர்
பிணையாமயிலுங்குயில்சேர்மடவன்ன
மணையும்பொழிலன்பிலாலந்துறையாரே. (௧)

சடையார்சதிரன்முதிராமதிசூடி
விடையார்கொடியொன்றுடையெந்தைவிமலன்
கிடையாரொலியோத்தரவத்திசைக்கிள்ளை
யடையார்பொழிலன்பிலாலந்துறையாரே. (௨)

ஊரும்மரவஞ்சடைமேலுறவைத்துப்
பாரும்பலிகொண்டொலிபாடும்பரமர்
நீருண்கயலும்வயல்வாளைவராலோ
டாரும்புனலன்பிலாலந்துறையாரே. (௩)

பிறையும்மரவும்முறவைத்தமுடிமேல்
நறையுண்டெழுவன்னியுமன்னுசடையார்
மறையும்பலவேதியரோதவொலிசென்
றறையும்புனலன்பிலாலந்துறையாரே. (௪)

நீடும்புனற்கங்கையுந்தங்கமுடிமேற்
கூடும்மலையாளொருபாகமமர்ந்தார்
மாடும்முழவம்மதிரம்மடமாத
ராடும்பதியன்பிலாலந்துறையாரே. (௫)

நீருர்திருமேனியருணமிலார்பா
லூருர்சுவையாகியவும்பர்பெருமான்
வேருரகிலும்மிகுசந்தனமுந்தி
யாருர்வயலன்பிலாலந்துறையாரே. (௬)

செடியார்தலையிற்பலிகொண்டினிதுண்ட
படியார்பரமன்பரமேட்டிதன்சீரைக்
கடியார்மலரும்புனல்தூவிநின்றேத்து
மடியார்தொழுமன்பிலாலந்துறையாரே. (௭)

விடத்தார்திகழுமிடற்றன்னடமாடி
படத்தாரரவம்விரவுஞ்சடையாதி
கொடித்தேரிலங்கைக்குலக்கோன்வரையார
வடர்த்தாரருளன்பிலாலந்துறையாரே. (௮)

வணங்கிம்மலர்மேலயனுநெடுமாலும்
பிணங்கியறிகின்றிலாமற்றும்பெருமை
சுணங்கும்முகத்தம்முலையாளொருபாக
மணங்குந்திகழன்பிலாலந்துறையாரே. (௯)

தறியார்துகில்போர்த்துழல்வார்சமணையர்
நெறியாவுணராநிலைகேடினர்நித்தல்
வெறியார்மலர்கொண்டடிவீழுமவரை
யறிவாரவரன்பிலாலந்துறையாரே. (௰)

அரவார்புனலன்பிலாலந்துறைதன்மேற்
கரவாதவர்காழியர்ஞானசம்பந்தன்
பரவார்தமிழ்பத்திசைபாடவல்லார்போய்
விரவாகுவர்வானிடைவீடெளிதாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சத்திவாகீசர்-தேவியார்-சவுந்தரநாயகி.

---

(சீகாழி-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

அடலேறமருங்கொடியண்ணல், மடலார்குழலாளொடுமன்னுங்
கடலார்புடைசூழ்தருகாழி, தொடர்வாரவர்தூநெறியாரே. (௧)

நிரையார்புனல்சூடியசெல்வன், வரையார்மகளோடுமகிழ்ந்தான்
கரையார்புனல்சூழ்தருகாழி, நிரையார்மலர்தூவுமினின்றே. (௨)

இடியார்குரலேறுடையெந்தை, துடியாரிடையாளொடுதுன்னுங்
கடியார்பொழில்சூழ்தருகாழி, யடியாரறியாரவலம்மே. (௩)

ஒளியார்விடமுண்டவொருவன், னளியார்குழன்மங்கையொடன்பாய்
களியார்பொழில்சூழ்தருகாழி, யெளிதாமதுகண்டவரின்பே. (௪)

பணியார்மலரார்தருபாதன், முனிதானுமையோடுமுயங்கிக்
கனியார்பொழில்சூழ்தருகாழி, யினிதாமதுகண்டவரீடே. (௫)

கொலையார்தருகூற்றமுதைத்து, மலையான்மகளோடுமகிழ்ந்தான்
கலையார்தொழுதேத்தியகாழி, தலையாற்றொழுவார்தலையாரே. (௬)

திருவார்சிலையாலெயிலெய்து, உருவாருமையோடுடனானான்
கருவார்பொழில்சூழ்தருகாழி, மருவாதவர்வான்மருவாரே. (௭)

அரக்கன்வலியொல்கவடர்த்து, வரைக்குமகளோடுமகிழ்ந்தான்
சுரக்கும்புனல்சூழ்தருகாழி, நிரக்குமலர்தூவுநினைந்தே. (௮)

இருவர்க்கெரியாகிநிமிர்ந்தா, னுருவிற்பெரியாளொடுசேருங்
கருநற்பரவைகமழ்காழி, மருவப்பிரியும்வினைமாய்ந்தே. (௯)

சமண்சாக்கியர்தாமலர்தூற்ற, வமைந்தானுமையோடுடனன்பாய்க்
கமழ்ந்தார்பொழில்சூழ்தருகாழி, சுமந்தாமலர்தூவுதல்தொண்டே. (௰)

நலமாகியஞானசம்பந்தன், கலமார்கடல்சூழ்தருகாழி
நிலையாகநினைந்தவர்பாடல், வலராளவர்வானடைவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருவீழிமிழலை-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

அரையார்விரிகோவணவாடை, நரையார்விடையூர்திநயந்தான்
விரையார்பொழில்வீழிம்மிழலை, யுரையாலுணர்வாருயர்வாரே. (௧)

புனைதல்புரிபுன்சடைதன்மேற், கனைதல்லொருகங்கைகரந்தான்
வினையில்லவர்வீழிம்மிழலை, நினைவில்லவர்நெஞ்சமுநெஞ்சே. (௨)

அழவல்லவராடியும்பாடி, யெழவல்லவரொந்தையடிமேல்
விழவல்லவர்வீழிம்மிழலை, தொழவல்லவர்நல்லவர்தொண்டே. (௩)

உரவம்புரிபுன்சடைதன்மே, லரவம்மரையார்த்தவழகன்
விரவும்பொழில்வீழிம்மிழலை, பரவும்மடியாரடியாரே. (௪)

கரிதாகியநஞ்சணிகண்டன், வரிதாகியவண்டறைகொன்றை
விரிதார்பொழில்வீழிம்மிழலை, யுரிதாநினைவாருயர்வாரே. (ரு)

சடையார்பிறையான்சரிபூதப், படையான்கொடிமேலதோர்வெள்ளை
விடையானுறைவீழிம்மிழலை, யடைவாரடியாரவர்தாமே. (சா)

செறியார்கழலுஞ்சிலம்பார்க்க, நெறியார்குழலாளொடுநின்றான்
வெறியார்பொழில்வீழிம்மிழலை, யறிவாரவலம்மறியாரே. (எ)

உளையாவலியொல்கவரக்கன், வளையாவிரலூன்றியமைந்தன்
விளையார்வயல்வீழிம்மிழலை, யளையாவருவாரடியாரே. (அ)

மருள்செய்திருவர்மயலாக, வருள்செய்தவனாரழலாகி
வெருள்செய்தவன்வீழிம்மிழலை, தெருள்செய்தவர்தீவினைதேய்வே.கூ

துளங்குந்நெறியாரவர்தொன்மை, வளங்கொள்ளன்மின்புல்லமண்டேரை
விளங்கும்பொழில்வீழிம்மிழலை, யுளங்கொள்பவர்தம்வினையோய்வே.

நளிர்காழியுண்ஞானசம்பந்தன், குளிரார்சடையானடிகூற
மிளிரார்பொழில்வீழிம்மிழலை, கிளர்பாடல்வல்லார்க்கில்லைகேடே.௰௧

திருச்சிற்றம்பலம்.

---

(திருஐயாறு-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

கலையார்மதியோடுறநீருந், நிலையார்சடையாரிடமாகும்
மலையாரமுமாமணிசந்தோ, டலையார்புனல்சேருமையாறே. (க)

மதியொன்றியகொன்றைவடத்தன், மதியொன்றவுதைத்தவர்வாழ்வும்
மதியின்னொடுசேர்கொடிமாடம், மதியம்பயில்கின்றவையாறே. (உ)

கொக்கின்னிறகின்னொடுவன்னி, புக்கசடையார்க்கிடமாகுந்
திக்கின்னிசைதேவர்வணங்கும், அக்கின்னரையாரதையாறே. (௩)

சிறைகொண்டபுரம்மவைசிந்தக், கறைகொண்டவர்காதல்செய்கோயில்
மறைகொண்டநல்வானவர்தம்மி, லறையும்மொலிசேருமையாறே.(௪)

உமையாளொருபாகமதாகச், சமைவாரவர்சார்விடமாகும்
மமையாருடல்சோர்தரமுத்தம், மமையாவருமந்தணையாறே. (ரு)

தலையின்றொடைமாலையணிந்து, கலைகொண்டதோர்கையினர்சேர்வா
நிலைகொண்டமனத்தவர்நித்தம், மலர்கொண்டுவணங்குமையாறே.(சா)

வரமொன்றியமாமலரோன்றன், சிரமொன்றையறுத்தவர்சேர்வாம்
வரைநின்றிழிவார்தருபொன்னி, யரவங்கொடுசேருமையாறே. (எ)

வரையொன்றதெடுத்தவரக்கன், சிரமங்கநெரித்தவர்சேர்வு
விரையின்மலர்மேதகுபொன்னித், திரைதன்னொடுசேருமையாறே. அ

சங்கத்தயனுமறியாமைப், பொங்குஞ்சுடரானவர்கோயில்
கொங்கிற்பொலியும்புனல்கொண்டு, அங்கிக்கெதிர்காட்டுமையாறே. கூ

துவராடையர்தோலுடையார்கள், கவர்வாய்மொழிகாதல்செய்யாதே
தவராசர்கடாமலரானோ, டவர்தாமணையந்தணையாறே. (௰)

கலையார்கலிக்காழியர்மன்னன், னலமார்தருஞானசம்பந்தன்
னலையார்புனல்சூழுமையாற்றைச், சொலுமாலைவல்லார்துயர்வீடே.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-செம்பொன்சோதீசுரர்-தேவியார்-அறம்வளர்த்தநாயகி.

---

(திருப்பனையூர்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

அரவச்சடைமேல்மதிமத்தம், விரவிப்பொலிகின்றவனூராம்
நிரவிப்பலதொண்டர்களோடும், பரவிப்பொலியும்பனையூரே. (க)

எண்ணொன்றிநினைந்தவர்தம்பா, லுண்ணின்றுமகிழ்ந்தவனூராங்
கண்ணின்றெழுசோலையில்வண்டு, பண்ணின்றொலிசெய்பனையூரே. உ

அலரும்மெறிசெஞ்சடைதன்மேல், மலரும்பிறையொன்றுடையானூர்
சிலரொன்றுமிருந்தடிபேணப், பலரும்பரவும்பனையூரே. (௩)

இடியார்கடனஞ்சமுதுண்டு, பொடியாடியமேனியினானூ
ரடியார்தொழமன்னவரோத்தப், படியார்பணியும்பனையூரே. (௪)

அறையார்கழல்மேலரவாட, விறையார்பலிதேர்ந்தவனூராம்
பொறையார்மிகுசீர்விழமல்கப், பறையாரொலிசெய்பனையூரே. (௫)

அணியார்தொழவல்லவரேத்த, மணியார்மிடறொன்றுடையானூர்
தணியார்மலர்கொண்டிருபோதும், பணிவார்பயிலும்பனையூரே. (௬)

அடையாதவர்மூவெயில்சீறும், விடையான்விறலார்கரியின்றோ
லுடையான்வனெண்பலபூதப், படையானவனூர்பனையூரே. (எ)

இலகும்முடிபத்துடையானை, யலல்கண்டருள்செய்தவெம்மண்ண
லுலகில்லுயிர்நீர்நிலமற்றும், பலகண்டவனூர்பனையூரே. (அ)

வரமுன்னிமகிழ்ந்தெழுவீர்காள், சிரமுன்னடிதாழவணங்கும்
பிரமன்னொடுமாலறியாத, பரமன்னுறையும்பனையூரே. (௯)

அழிவல்லமணரொடுதேரர், மொழிவல்லனசொல்லிடபோதும்
மிழிவில்லதோர்செம்மையினானூர், பழியில்லவர்சேர்பனையூரே. (௰)

பாரார்விடையான்பனையூர்மேற், சீரார்தமிழ்ஞானசம்பந்தன்
னாராதசொன்மாலைகள்பத்தும், மூரூர்நினைவாருயர்வாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சவுந்தரேசர்-தேவியார்-பெரியநாயகி.

---

(திருமயிலாடுதுறை-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

கரவின்றிநன்மாமலர்கொண்டே, யிரவும்பகலுந்தொழுவார்கள்
சிரமொன்றியசெஞ்சடையார்வாழ், வரமாமயிலாடுதுறையே. (௧)

உரவெங்கரியின்னுரிபோர்த்த, பரமன்னுறையும்பதியென்பர்
குரவஞ்சுரபுன்னையும்வன்னி, மருவும்மயிலாடுதுறையே. (௨)

ஊனத்திருணீங்கிடவேண்டில், ஞானப்பொருள்கொண்டடிபேணுந்
தேனொத்தினியானமருஞ்சேர், வானம்மயிலாடுதுறையே. (௩)

அஞ்சொண்புலனும்மவைசெற்ற, மைஞ்சன்மயிலாடுதுறையை
நெஞ்சொன்றிநினைந்தெழுவார்மேற், றுஞ்சும்பிணியாயினதானே. (௪)

தணியார்மதிசெஞ்சடையான்றன், னணியார்ந்தவருக்கருளென்றும்
பிணியாயினதீர்த்தருள்செய்யும், மணியான்மயிலாடுதுறையே. (௫)

தொண்டரிசைபாடியுங்கூடிக், கண்டுதுதிசெய்பவனூராம்
பண்டும்பலவேதியரோத, வண்டார்மயிலாடுதுறையே. (௬)

அணங்கோடொருபாகமமர்ந்து, இணங்கியருள்செய்தவனூராம்
நுணங்கும்புரிநூலர்கள்கூடி, வணங்கும்மயிலாடுதுறையே. (௭)

சிரங்கையினிலேந்தியிரந்த, பரங்கொள்பரமேட்டிவரையா
லரங்கவ்வரக்கன்வலிசெற்ற, வரங்கொண்மயிலாடுதுறையே. (௮)

ஞாலத்தைநுகர்ந்தவன்றானுங், கோலத்தயனும்மறியாத
சீலத்தவனூர்சிலர்கூடி, மாலைத்தீர்மயிலாடுதுறையே. (௯)

நின்றுண்சமணரு நெடுந்தேர, ரொன்றுமறியாமையுயர்ந்த
வென்றியருளாயவனூராம், மன்றன்மயிலாடுதுறையே. (௰)

நயர்காழிபுன்ஞானசம்பந்தன், மயல்தீர்மயிலாடுதுறைமேற்
செயலாலுரைசெய்தனபத்து,முயர்வாமிவையுற்றுணர்வார்க்கே.௰௧

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மாயூரநாதர் - தேவியார்-அஞ்சனாயகி.

---

(திருவேட்களம்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

அந்தமுமாதியுமாகியவண்ணலாரழலங்கையமர்ந்திலங்க
மந்தமுழவமியம்பமலைமகள்காணநின்றாடிச்
சந்தமிலங்குநகுதலைகங்கைதண்மதியம்மயலேததும்ப
வெந்தவெண்ணீறுமெய்பூசும்வேட்களநன்னகராரே. (௧)

சடைதனைத்தாழ்தலுமேறமுடித்துச் சங்கவெண்டோடுசரிந்திலங்கப்
புடைதனிற்பாரிடஞ்சூழப்போதருமாறிவர்போல்வா
ருடைநவின்றோர்விரற்கோவணவாடை யுண்பதுமூரிடுபிச்சைவெள்ளை
விடைதனையூர்திநயந்தார்வேட்களநன்னகராரே. (௨)

பூதமும்பல்கணமும்புடைசூழப் பூமியும்விண்ணுமுடன்பொருந்தச்
சீதமும்வெம்மையுமாகிச்சீரொடுநின்றவெஞ்செல்வ
ரோதமுங்கானலுஞ்சூழ்தருவேலையுள்ளங்கலந்திசையாலெழுந்த
வேதமும்வேள்வியுமோவாவேட்களநன்னகராரே. (௩)

அரைபுல்குமைந்தலையாடலரவமமையவெண்கோவணத்தோடசைத்து
வரைபுல்குமார்பிலோராமைவாங்கியணிந்தவர்தாந்
திரைபுல்குதெண்கடற்றண்கழியோதந்தேனலங்கானலில்வண்டுபண்செ
ய்ய, விரைபுல்குபைம்பொழில்சூழ்ந்தவேட்களநன்னகராரே. (௪)

பண்ணுறுவண்டறைகொன்றையலங்கல் பால்புரைநீறுவெண்ணூல்கி
டந்த, பெண்ணுறுமார்பினர்பேணார்மும்மதிலெய்தபெருமான்
கண்ணுறுநெற்றிகலந்தவெண்டிங்கட்கண்ணியர்விண்ணவர்கைதொழு
தேத்தும், வெண்ணிறமால்விடையண்ணல்வேட்களநன்னகராரே.(௫)

கறிவளர்குன்றமெடுத்தவன்காதற்கண்கவரைங்கணையோனுடலம்
பொறிவளராரழலுண்ணப்பொங்கியபூதபுராணர். [யாடை
மறிவளரங்கையர்மங்கையோர்பங்கர் மைஞ்ஞிறமானுரித்தோலுடை
வெறிவளர்கொன்றையந்தாரார்வேட்களநன்னகராரே. (௬)

மண்பொடிக்கொண்டெரித்தோர்சுடலைமாமலைவேந்தன்மகள்மகிழ
நுண்பொடிச்சேரநின்றாடிநொய்யனசெய்யலுகந்தார் [தார்
கண்பொடிவெண்டலையோடுகையேந்திக் காலனைக்காலால்கடந்துகந்
வெண்பொடிச்சேர்திருமார்பர்வேட்களநன்னகராரே. (௭)

ஆழ்தருமால்கடனஞ்சினையுண்டாரமுதமமரர்க்கருளிச்
சூழ்தருபாம்பரையார்த்துச்சூலமோடொண்மழுவேந்தித்
தாழ்தருபுன்சடையொன்றினைவாங்கித்தண்மதியம்மயலேததும்ப
வீழ்தருகங்கைகரந்தார்வேட்களநன்னகராரே. (௮)

திருவொளிகாணியபேதுறுகின்றதிசைமுகனுந்திசைமேலளந்த
கருவரையேந்தியமாலுங்கைதொழநின்றதுமல்லா
லருவரையொல்கவெடுத்தவரக்கனாடெழிற்றோள்களாழத்தழுந்த
வெருவுறவூன்றியபெம்மான்வேட்களநன்னகராரே. (௯)

அத்தமண்டோய்துவரார்அமண்குண்டர்யாதுமல்லாவுரையேயுரைத்துப்
பொய்த்தவம்பேசுவதல்லாற்புறனுரையாதொன்றுங்கொள்ளேல்
முத்தனவெண்முறுவல்லுமையஞ்சமுரிவலலானையினீருரிபோர்த்த
வித்தகவேதமுதல்வர்வேட்களநன்னகராரே. (௰)

விண்ணியல்மாடம்விளங்கொளிவீதி வெண்கொடியெங்கும்விரிந்தில
நண்ணியசீரவர்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன் [ங்க
பெண்ணினல்லாளொருபாகமமர்ந்துபேணியவேட்களமேன்மொழி
ந்த, பண்ணியல்பாடல்வல்லார்கள்பழியொடுபாவமிலரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பாசுபதேசுரர்-தேவியார்-நல்லநாயகியம்மை.

ஆ பதிகம் - ௩௪.

---

(திருவாழ்கொளிபுத்தூர்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

பொடியுடைமார்பினர்போர்விடையேறிப்பூதகணம்புடைசூழக்
கொடியுடையூர்திரிந்தையங்கொண்டுபலபலகூறி
வடிவுடைவாணெடுங்கண்ணுமைபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்
கடிகமழ்மாமலரிட்டுக்கறைமிடற்றானடிகாண்போம். (௧)

அரைகெழுகோவணவாடையின்மேலோராடரவம்மசைத்தையம்
புரைகெழுவெண்டலையேந்திப்போர்விடையேறிப்புகழ
வரைகெழுமங்கையதாகமோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்
விரைகமழ்மாமலர்தூவிவிரிசடையானடிசேர்வாம். (௨)

பூணெடுநாகமசைத்தனலாடிப் புன்றலையங்கையிலேந்தி
யூணிடுபிச்சையூரையமுண்டியென்றுபலகூறி
வாணெடுங்கண்ணுமைமங்கையோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்த்
தாணெடுமாமலரிட்டுத்தலைவனதாணிழல்சார்வோம். (௩)

தாரிடுகொன்றையோர்வெண்மதிகங்கைதாழ்சடைமேலவைசூடி
யூரிடுபிச்சைகொள்செல்வமுண்டியென்றுபலகூறி
வாரிடுமென்முலைமாதொருபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்க்
காரிடுமாமலர்தூவிக்கறைமிடற்றானடிகாண்போம். (௪)

கனமலர்க்கொன்றையலங்கலிலங்கக்காதிலோர்வெண்குழையோடு
புனமலர்மாலைபுனைந்தூர்புகுதியென்றேபலகூறி
வனமுலைமாமலைமங்கையோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூ
ரினமலரேய்ந்தனதூவியெம்பெருமானடிசேர்வோம். (௫)

அளைவளர்நாகமசைத்தனலாடியலர்மிசையந்தணனுச்சிக்
களைதலையிற்பலிகொள்ளுங்கருத்தனேகள்வனேயென்று
வளைபொலிமுன்கைமடந்தையோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்த்
தளையவிழ்மாமலர்தூவித்தலைவனதாளிணைசார்வோம். (௬)

அடர்செவிவேழத்தினீருரிபோர்த்துத்தழிதலையங்கையிலேந்தி
யுடலிடுபிச்சையோடையமுண்டியென்றுபலகூறி
மடல்நெடுமாமலர்க்கண்ணியோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்த்
தடமலராயினதூவித்தலைவனதாணிழல்சார்வோம். (௭)

உயர்வரையொல்கவெடுத்தவரக்கனொளிர்கடகக்கையடர்த்
தயலிடுபிச்சையோடையமார்தலையென்றடிபோற்றி
வயல்விரிநீலநெடுங்கணிபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்ச்
சயவிரிமாமலர்தூவித்தாழ்சடையானடிசார்வோம். (௮)

கரியவனான்முகன்கைதொழுதேத்தக்காணலுஞ்சாரலுமாகா
வெரியுருவாகியூரையமிடுபலியுண்ணியென்றேத்தி
வரியரவல்குன்மடந்தையோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்
விரிமலராயினதூவிவிகிர்தனசேவடிசேர்வோம். (௯)

குண்டமணர்துவர்க்கூறைகண்மெய்யிற்கொள்கையினார்புறங்கூற
வெண்டலையிற்பலிகொண்டல்விரும்பினையென்றுவிளம்பி
வண்டமர்பூங்குழன்மங்கையோர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்த்
தொண்டர்கள்மாமலர்தூவத்தோன்றிநின்றானடிசேர்வோம். (௰)

கல்லுயர்மாக்கடனின்றுமுழங்குங்கரைபொருகாழியமூதூர்
நல்லுயர்நான்மறைநாவினற்றமிழ்ஞானசம்பந்தன்
வல்லுயர்சூலமும்வெண்மழுவாளும்வல்லவன்வாழ்கொளிபுத்தூர்
சொல்லியபாடல்கள்வல்லார்துயர்கெடுதலெளிதாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மாணிக்கவண்ணவீசுரர்-தேவியார்-வண்டார்பூங்குழலம்மை.

---

(திருப்பாம்புரம்-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்தசெல்வர்
வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறியேந்தியமைந்தர்
காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண்ணுதல்விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தருநான்மறையாளர்பாம்புரநன்னகராரே. (௧)

கொக்கிறகோடுகூவிளமத்தங்கொன்றையொடெருக்கணிசடைய
ரக்கினொடாமைபூண்டழகாகவனலதுவாடுமெம்மடிகள்
மிக்கநல்வேதவேள்வியுளெங்கும்விண்ணவர்விரைமலர்தூவப்
பக்கம்பல்பூதம்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௨)

துன்னலினாடையுடுத்ததன்மேலோர்சூறைநல்லரவதுசுற்றிப்
பின்னுவார்சடைகடாழவிட்டாடிப் பித்தராய்த்திரியுமெம்பெருமான்
மன்னுமாமலர்கடூவிடநாளுமாமலையாட்டியுந்தாமும்
பன்னுநூல்மறைகள்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. (௩)

துஞ்சுநாடுறந்துதோற்றமுமில்லாச்சுடர்விடுசோதியெம்பெருமா
னஞ்சுசேர்கண்டமுடையவெம்மைந்தர்நள்ளிருணடஞ்செயுநம்பர்
மஞ்சுதோய்சோலைமாமயிலாடமாடமாளிகைதன்மேலேறிப்
பஞ்சுசேர்மெல்லடிப்பாவையர்பயிலும்பாம்புரநன்னகராரே. (௪)

நதியதனயலேநகுதலைமாலைநாண்மதிசடைமிசையணிந்து
கதியதுவாகக்காளிமுன்காணக்கானிடைநடஞ்செய்தகருத்தர்
விதியதுவழுவாவேதியர்வேள்விசெய்தவரோத்தொலியோவாப்
பதியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே. (௫)

ஓதிநன்குணர்வார்க்குணர்வுடையொருவரொளிதிகழுருவஞ்சேரொரு
மாதினையிடமாகவைத்தவெம்வள்ளல்மான்மறியேந்தியமைந்தர் [வர்
ஆதிநீயருளென்றமரர்கள்பணியமலைகடல்கடையவன்றெழுந்த
பாதிவெண்பிறைசடைவைத்தவெம்பரமர்பாம்புரநன்னகராரே. (௬)

மாலினுக்கன்றுசக்கரமீந்துமலரவர்க்கொருமுகமொழித்தே
ஆலின்கீழறமோர்நால்வருக்கருளியனலுருவாம்மெய்யடிகள்
காலனைக்காய்ந்துதங்கழலடியாற்காமனைப்பொடிபடநோக்கிப்
பாலனுக்கருள்கள்செய்தவெம்மடிகள்பாம்புரநன்னகராரே. (எ)

விடைத்தவல்லரக்கன்வெற்பினையெடுக்கமெல்லியதிருவிரலூன்றிப்
படைத்தவன்றனக்கன்றருள்செய்தவடிகளனலதுவாடுமெம்மண்ணல்
மடக்கொடியவர்கள்வருபுனலரவம்வந்திழியரிசிலின்கரைமேற்
படப்பையிற்கொணர்ந்துபருமணிசிதறும்பாம்புரநன்னகராரே. (அ)

கடிபடுகமலத்தயனொடுமாலுங்காதலோடடிமுடிதேடச்
செடிபடுவினைகடீர்த்தருள்செய்யுந்தீவணரெம்முடைச்செல்வர்
முடியுடையமரர்முனிகணத்தவர்கள்முறைமுறையடிபணிந்தேத்தப்
படியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே. (கூ)

குண்டர்சாக்கியருங்குணமிலாதாருங்குற்றுவிட்டுடுக்கையர்தாமுங்
கண்டவாறுரைத்துக்கால்நிமிர்த்துண்ணுங்கையர்தாமுள்ளவாறறியார்
வண்டுசேர்குழலிமலைமகணடுங்கவாரணமுரிசெய்துபோர்த்தார்
பண்டுநாஞ்செய்தபாவங்கடீர்ப்பார்பாம்புரநன்னகராரே (ய)

பார்மலிந்தோங்கிப்பருமதில்சூழ்ந்தபாம்புரநன்னகராரைக்
கார்மலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக்கவுணி
நான்மலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தன்செந்தமிழ்வல்லார்
சீர்மலிந்தழகார்செல்வமதோங்கிச்சிவனடிநண்ணுவர்தாமே. (யக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பாம்புரேசர்-தேவியார்-வண்டமர்பூங்குழலம்மை.

---

(திருப்பேணுபெருந்துறை-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

பைம்மாநாகம்பன்மலர்க்கொன்றைபன்றிவெண்கொம்பொன்றுபூண்
டு,செம்மாந்தையம்பெய்கென்றுசொல்லிச்செய்தொழில்பேணியோ
ர்செல்வ, ரம்மானோக்கியந்தளிர்மேனியரிவையோர்பாகமமர்ந்த
பெம்மானல்கியதொல்புகழாளர்பேணுபெருந்துறையாரே. (க)

மூவருமாகியிருவருமாகிமுதல்வனுமாய்நின்றமூர்த்தி
பாவங்கடீர்தரநல்வினைநல்கிப்பல்கணநின்றுபணியச்
சாவமதாகியமால்வரைகொண்டுதண்மதின்மூன்றெரித்த
தேவர்கடேவரெம்பெருமானார்தீதில்பெருந்துறையாரே. (உ)

செய்பூங்கொன்றைகூவிளமாலைசெஞ் ஞியுட்சேர்புனல் சோத்திக்
கொய்பூங்கோதைமாதுமைபாகங்கூடியோரடிகளிடைவேடர்
கைபோனுனற்கனிகுலைவாழைக்காய்குலையிற்கழுகினப்
பெய்பூம்பாளைபாய்ந்திழிதேறல்பில்குபெருந்துறையாரே. (௩)

நிலனுடுவானுநீரொடுதீயும்வாயுவுமாகியோரைந்து
புலனுடுவென்றுபொய்ம்மைகடீர்த்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
நலனுடுதீங்குந்தானலதின்றிநன்கெழுசிந்தையராகி
மலனுடுமாசுமில்லவர்வாழுமல்குபெருந்துறையாரே. (௪)

பணிவாயுள்ளநன்கெழுநாவின்பத்தர்கள்பத்திமைசெய்யத்
துணியார்தங்களுள்ளமிலாதசுடர்கள்சோதிப்பரியா
ரணியார்நீலமாகியகண்டரரிசிலுருஞ்சுகரைமேல்
மணிவாய்நீலம்வாய்கமழ்தேறல்மலருபெருந்துறையாரே. (௫)

எண்ணார்தங்கள்மும்மதில்வேவவேவலங்காட்டியவெந்தை
விண்ணோர்சாரத்தன்னருள்செய்தவித்தகர்வேதமுதல்வர்
பண்ணார்பாடலாடலறாதபசுபதியீசனோர்பாகம்
பெண்ணாணுபவார்சடையண்ணல்பேணுபெருந்துறையாரே. (௬)

விழையாருள்ளநன்கெழுநாவில்வினைகெடவேதமாறங்கம்
பிழையாவண்ணம்பண்ணியவாற்றற்பெரியோரேத்தும்பெருமான்
றழையார்மாவின்றாழ்கனியுந்தித்தண் * அரிசில்புடைசூழ்ந்த
குழையார்சோலைமென்னடையன்னங்கூடுபெருந்துறையாரே. (௭)

பொன்னங்கானல்வெண்டிரைசூழ்ந்தபொருகடல்வேலியிலங்கை
மன்னனொல்கமால்வரையூன்றிமாமுரணாகமுந்தோளு
முன்னவைவாட்டிப்பின்னருள்செய்தமூவிலைவேலுடைமூர்த்தி
யன்னங்கன்னிப்பேடையோடாடியணவுபெருந்துறையாரே. (௮)

புள்வாய்போழ்ந்துமாநிலங்கீண்டபொருகடல்வண்ணனும்பூவி
னுள்வாயல்லிமேலுறைவானுமுணர்வரியானுமைகேள்வன்
முள்வாய்தாளின்றாமரைமொட்டின்முகமலரக்கயல்பாயக்
கள்வாய்நீலங்கண்மலரேய்க்குங்காமர்பெருந்துறையாரே. (௯)

குண்டுந்தேருங்கூறைகளைந்துங்கூப்பிலர்செப்பிலராகி
மிண்டும்மிண்டர்மிண்டவைகண்டுமிண்டுசெயாதுவிரும்புந்

---

* அரிசில் என்பது - ஒருநதி. அது அரிசொல்ல வந்ததினால் அரிசொல் நதியென்று கும்பகோணபுராணத்திற சொல்லப்படுகின்றது.

தண்டும்பாம்பும்வெண்டலைசூலந்தாங்கியதேவர்தலைவர்
வண்டுந்தேனும்வாழ்பொழிற்சோலைமல்குபெருந்துறையாரே. (௰)

கடையார்மாடநன்கெழுவீதிக்கழுமலவூரன்கலந்து
நடையாரின்சொல்ஞானசம்பந்தனல்லபெருந்துறைமேய
படையார்சூலம்வல்லவன்பாதம்பரவியபத்திவைவல்லா
ருடையாராகியுள்ளமுமொன்றியுலகினின்மன்னுவர்தாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சிவாநந்தநாதர்- தேவியார்-மலையரசியம்மை.

---

(திருக்கற்குடி-பண்-தக்கராகம் )

திருச்சிற்றம்பலம்.

வடந்திகழ்மென்முலையாளைப்பாகமதாகமதித்துத்
தடந்திரைசேர்புனல்மாதைத்தாழ்சடைவைத்தசதுர
ரிடந்திகழ்முப்புரிநூலர்துன்பமொடின்பமதெல்லாங்
கடந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. (௧)

அங்கமோராறுடைவேள்வியானவருமறைநான்கும்
பங்கமில்பாடலோடாடல்பாணிபயின்றபடிறர்
சங்கமதார்குறமாதர்தங்கையில்மைந்தர்கள்தாவிக்
கங்குலின்மாமதிபற்றுங்கற்குடிமாமலையாரே. (௨)

நீரகலந்தருசென்னிநீடியமத்தமும்வைத்துத்
தாரகையின்னொளிசூழ்ந்ததண்மதிசூடியசைவர்
போரகலந்தருவேடர்புனத்திடையிட்டவிறகிற்
காரகிலின்புகைவிம்முங்கற்குடிமாமலையாரே. (௩)

ஒருங்களிநீயிறைவாவென்றும்பர்களோலமிடக்கண்
டிருங்களமாரவிடத்தையின்னமுதுண்ணியவீசர்
மருங்களியார்பிடிவாயில்வாழ்வெதிரின்முளைவாரிக்
கருங்களியானைகொடுக்குங்கற்குடிமாமலையாரே. (௪)

போர்மலிதிண்சிலைகொண்டுபூதகணம்புடைசூழப்
பார்மலிவேடுருவாகிப்பண்டொருவர்க்கருள்செய்தா
ரோர்மலிகேழல்கிளைத்தவின்னொளியாமணியெங்கும்
கார்மலிவேடர்குவிக்குங்கற்குடிமாமலையாரே. (௫)

உலந்தவரென்பதணிந்தேயூரிடுபிச்சையராகி
விலங்கல்வில்வெங்கனலாலேமூவெயில்வேவமுனிந்தார்
நலந்தருசிந்தையராகிநாமலிமாலையினாலே
கலந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. (௬)

மானிடமார்தருகையர்மாமழுவாரும்வலத்தா
ரூனிடையார்தலையோட்டிலுண்கலனாகவுகந்தார்
தேனிடையார்தருசந்தின்றிண்சிறையால்தினைவித்திக்
கானிடைவேடர்விளைக்குங்கற்குடிமாமலையாரே. (௭)

வாளமர்வீரநினைந்தவிராவணன்மாமலையின்கீழ்த்
தோளமர்வன்றலைகுன்றத்தொல்விரலூன்றுதுணைவர்
தாளமர்வேய்தலைப்பற்றித்தாழ்கரிவிட்டவிசைபோய்க்
கோளமதார்முகில்கீறுங்கற்குடிமாமலையாரே. (அ)

தண்டமர்தாமரையானுந்தாவியிம்மண்ணையளந்து
கொண்டவனும்மறிவொண்ணாக்கொள்கையர்வெள்விடையூர்வர்
வண்டிசையாயினபாடநீடியவார்பொழினீழற்
கண்டமர்மாமயிலாடுங்கற்குடிமாமலையாரே. (௯)

மூத்துவராடையினாருமூசுகருப்பொடியாரு
நாத்துவர்பொய்ம்மொழியார்கணயமிலராமதிவைத்தா
ரோத்துயர்பத்தர்கள்சித்தரிறைஞ்சவவரிடரெல்லாங்
காத்தவர்காமருசோலைக்கற்குடிமாமலையாரே. (௰)

காமருவார்பொழில்சூழுங்கற்குடிமாமலையானை
நாமருவண்புகழ்காழிநலந்திகழ்ஞானசம்பந்தன்
பாமருசெந்தமிழ்மாலைபத்திவைபாடவல்லார்கள்
பூமலிவானவரோடும்பொன்னுலகிற்பொலிவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-முத்தீசர்-தேவியார்-அஞ்சனாக்ஷி.

---

(திருப்பாச்சிலாச்சிராமம்- முயலகன்றீர்த்தது-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

துணிவளர்திங்கள்துளங்கிவிளங்கச்சுடர்ச்சடைசுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர்பாரிடஞ்சூழவாரிடமும்பலிதேர்வ
ரணிவளர்கோலமெலாஞ்செய்துபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மணிவளர்கண்டரோமங்கையைவாடமயல்செய்வதோவிவர்மாண்பே.

கலைபுனைமானுரிதோலுடையாடைகனல்சுடராலிவர்கண்கள்
தலையணிசென்னியர்தாரணிமார்பர்தம்மடிகளிவரென்ன
அலைபுனல்பூம்பொழில்சூழ்ந்தமர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
விலைபுனைவேலரோவேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (௨)

வெஞ்சுடராடுவர்துஞ்சிருண்மாலைவேண்டுவர்பூண்பதுவெண்ணூல்
நஞ்சடைகண்டர்நெஞ்சிடமாகநண்ணுவர்நம்மைநயந்து
மஞ்சடைமாளிகைசூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோபைந்தொடிவாடச்சிதைசெய்வதோவிவர்சீரே.

கனமலர்க்கொன்றையலங்கலிலங்கக்கனல்தருதூமதிக்கண்ணி
புனமலர்மாலையணிந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
வனமலிவண்பொழில்சூழ்தருபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
மனமலிமைந்தரோமங்கையைவாட மயல்செய்வதோவிவர்மாண்பே.

மாந்தர்தம்பால்நறுநெய்மகிழ்ந்தாடிவளர்சடைமேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல்தாளமோர்வீணைமுதிரவோர்வாய்மூரிபாடி
யாந்தைவிழிச்சிறுபூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சாந்தணிமார்பரோதையலைவாடச்சதுர்செய்வதோவிவர்சார்வே. (௫)

நீறுமெய்பூசிநிறைசடைதாழநெற்றிக்கண்ணாலுற்றுநோக்கி
யாறதுசூடியாடரவாட்டியைவிரற்கோவணவாடை
பாறருமேனியர்பூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
வேறதுவேறியரேழையைவாடவிடர்செய்வதோவிவரீடே. (௬)

பொங்கிளநாகமோரேகவடத்தோடாமைவெண்ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலைபுனைந்தழகாயகுழகர்கொலாமிவரென்ன
வங்கிளமங்கையோர்பங்கினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோதாழ்குழல்வாடச்சதிர்செய்வதோவிவர்சார்வே.

ஏவலத்தால்விசயற்கருள்செய்தேயிராவணனையீடழித்து
மூவரிலுமுதலாய்நடுவாயமூர்த்தியையன்றிமொழியாள்
யாவர்களும்பரவும்மெழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
தேவர்கள்தேவரோசேயிழைவாடச்சிதைசெய்வதோவிவர்சார்வே. ௮

மேலதுநான்முகனெய்தியதில்லைக்கீழதுசேவடிதன்னை
நீலதுவண்ணனுமெய்தியதில்லையெனவிவர்நின்றதுமல்லா
லாலதுமாமதிதோய்பொழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பாலதுவண்ணரோபைத்தொடிவாடப்பழிசெய்வதோவிவர்பண்பே.

நாணொடுகூடியசாயினரேனுநகுவரவரிருபோது
மூணொடுகூடியவுட்குந்தகையாருரைகளவைகொளவேண்டா
வாணொடுபெண்வடிவாயினபாச்சிலாச்சிராமத்துறைகின்ற
பூணெடுமார்பரோபூங்கொடிவாடப்புனைசெய்வதோவிவர்பொற்பே.

அகமலியன்பொடுதொண்டர்வணங்கபாச்சிராமத்துறைகின்ற
புகைமலிமாலைபுனைந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
நகைமலிதண்பொழில்சூழ்தருகாழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
றகைமலிதண்டமிழ்கொண்டிவையேத்தச்சாரகிலாவினைதானே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

முயலகன்-என்பது ஒருவிதவலிநோய் இது ஒருராசன்மகளுக்குக் கண்டிருந்து இந்தத் திருப்பதிகமோதி யருளினவளவில் தீர்ந்தது.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மாற்றறிவரதர்-தேவியார்-பாலசுந்தரநாயகி.

ஆ பதிகம்-௪௪.

---

(திருப்பழையனூர்-திருஆலங்காடு-பண்-தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௧)

கேடும்பிறவியுமாக்கினாருங்கேடிலா
வீடுமாநெறிவிளம்பினாரெம்விகிர்தனார்
காடுஞ்சுடலையுங்கைக்கொண்டல்லிற்கணப்பேயோ
டாடும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௨)

கந்தங்கமழ்கொன்றைக்கண்ணிசூடிகனலாடி
வெந்தபொடிநீற்றைவிளங்கப்பூசும்விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலையரவின்றோன்றிக்கோடல்பூத்
தந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௩)

பாலவெண்மதிசென்னிபடரச்சூடிப்பழியோராக்
காலனுயிர்செற்றகாலனாயகருத்தனார்
கோலம்பொழிற்சோலைப்பெடையோடாடிமடமஞ்ஞை
யாலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௪)

ஈர்க்கும்புனல்சூடியிளவெண்டிங்கள்முதிரவே
பார்க்குமரவம்பூண்டாடிவேடம்பயின்றாரும்
கார்க்கொள்கொடிமுல்லைகுருந்தமேறிக்கருந்தேன்மொய்த்
தார்க்கும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௫)

பறையுஞ்சிறுகுழலும்யாழும்பூதம்பயிற்றவே
மறையும்பலபாடிமயானத்துறையுமைந்தனார்
பிறையும்பெரும்புனல்சேர்சடையினாரும்பேடைவண்
டறையும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௬)

நுணங்குமறைபாடியாடிவேடம்பயின்றாரு
மிணங்குமலைமகளோடிருகூறொன்றாயிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர்வைகலேத்தும்வாழ்த்துங்கேட்
டணங்கும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௭)

கணையும்வரிசிலையுமெரியுங்கூடிக்கவர்ந்துண்ண
வினையிலெயில்மூன்றுமெரித்திட்டாரெம்மிறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங்கலையுமெல்லாங்கங்குல்சேர்ந்
தணையும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௮)

கவிழமலைதரளக்கடகக்கையாலெடுத்தான்றோள்
பவழநுனைவிரலாற்பையவூன்றிப்பரிந்தாருந்
தவழுங்கொடிமுல்லைபுறவஞ்சேரநறவம்பூத்
தவிழும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௯)

பகலுமிரவுஞ்சேர்பண்பினாருநண்போரா
திகலுமிருவர்க்குமெரியாய்த்தோன்றிநிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடுவல்லார்க்கென்றுந்தீயபோ
யகலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௰)

போழம்பலபேசிப்போதுசாற்றித்திரிவாரும்
வேழம்வருமளவும்வெயிலேதுற்றித்திரிவாரும்
கேழல்வினைபோகக்கேட்பிப்பாருங்கேடிலா
வாழ்வர்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௰௧)

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்த
னாந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே. (௰௨)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-ஊர்த்ததாண்டவேசுரர்-தேவியார்-வண்டார்குழலியம்மை.

பல்லார்பகுவாயநகுவெண்டலைசூடி
வில்லாலெயிலெய்தானிடம்வீரட்டானத்தே. (அ)

நெடியானொடுநான்முகனுநிமிர்ந்தானைக்காண்கிலார்
பொடியாடுமார்பானைப்புரிநூலுடையானைக்
கடியார்கழுநீலம்மலருமதிகையுள்
வெடியார்தலையேந்தியாடும்வீரட்டானத்தே. (௯)

அரையோடலர்பிண்டிமருவிக்குண்டிகை
சுரையோடுடனேந்தியுடைவிட்டுழல்வார்கள்
உரைமேபரைபொய்வாருமையோடுடனாகி
விரைதோயலர்தாரானாடும்வீரட்டானத்தே. (௰)

ஞாழல்கமழ்காழியுண்ஞானசம்பந்தன்
வேழம்பொருதெண்ணீரதிகைவீரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
வாழுந்துணையாகநினைவார்வினையிலரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

நடுநாட்டில்-கெடிலநதிக்கு வடபாகத்திலிருக்
கின்றது திரிபுரவிசயஞ்செய்த வீரட்டானம்.

சுவாமிபெயர்-அதிகைநாதர்-வீரட்டானேசுவரர்-தேவியார்-திருவதிகைநாயகி.

---

(திருச்சிரபுரம் - பண் - பழந்தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

பல்லடைந்தவெண்டலையிற்பலிகொள்வதன்றியும்போய்
வில்லடைந்தபுருவநல்லாள்மேனியில்வைத்தலென்னே
சொல்லடைந்ததொன்மறையோடங்கங்கலைகளெல்லாஞ்
செல்லடைந்தசெல்வர்வாழுஞ்சிரபுரமேயவனே. (௧)

கொல்லைமுல்லைநகையினாளோர்கூறதுவன்றியும்போ
யல்லல்வாழ்க்கைப்பலிகொண்டுண்ணுமாதரவென்னைகொலாஞ்
சொல்லநீண்டபெருமையாளர்தொல்கலைகற்றுவல்லார்
செல்லநீண்டசெல்வமல்குசிரபுரமேயவனே. (௨)

நீரடைந்தசடையின்மேலோர்நிகழ்மதியன்றியும்போ
யூரடைந்தவேறதேறியுண்பலிகொள்வதென்னே
காரடைந்தசோலைசூழ்ந்துகாமரம்வண்டிசைப்பச்
சீரடைந்தசெல்வமோங்குசிரபுரமேயவனே. (௩)

கையடைந்தமானினோடுகாரரவன்றியும்போய்
மெய்யடைந்தவேட்கையோடுமெல்லியல்வைத்ததென்னே

கையடைந்தகளைகளாகச்செங்கழுநீர்மலர்கள்
செய்யடைந்தவயல்கள்சூழ்ந்தசிரபுரமேயவனே. (௪)

புரமெரித்தவெற்றியோடும்போர்மதயானைதன்னைக்
கரமெடுத்துத்தோலுரித்தகாரணமாவதென்னே
மரமுரித்ததோலுடுத்தமாதவர்தேவரோடுஞ்
சிரமெடுத்தகைகள்கூப்புஞ்சிரபுரமேயவனே. (௫)

கண்ணுமூன்றுமுடையதன்றிக்கையினில்வெண்மழுவும்
பண்ணுமூன்றுவீணையோடுபாம்புடன்வைத்ததென்னே
எண்ணுமூன்றுகனலுமோம்பியெழுமையும்விழுமியராய்த்
திண்ணமூன்றுவேள்வியாளர்சிரபுரமேயவனே. (௬)

குறைபடாதவேட்கையோடுகோல்வளையாளொருபாற்
பொறைபடாதவின்பமோடுபுணர்தருமெய்ம்மையென்னே
இறைபடாதமென்முலையார்மாளிகைமேலிருந்து
சிறைபடாதபாடலோங்குசிரபுரமேயவனே. (௭)

மலையெடுத்தவாளரக்கனஞ்சவொருவிரலால்
நிலையெடுத்தகொள்கையானேநின்மலனேநினைவார்
துலையெடுத்தசொற்பயில்வார்மேதகுவீதிதோறுஞ்
சிலையெடுத்ததோளினானேசிரபுரமேயவனே. (௮)

மாலினோடுமலரினானும்வந்தவர்காணாது
சாலுமஞ்சப்பண்ணிநீண்டதத்துவமேயதென்னே
நாலுவேதமோதலார்கள்நந்துணையென்றிறைஞ்சச்
சேலுமேயுங்கழனிசூழ்ந்தசிரபுரமேயவனே. (௯)

புத்தரோடுசமணர்சொற்கள்புறனுரையென்றிருக்கும்
பத்தர்வந்துபணியவைத்தபான்மையதென்னைகொலாம்
மத்தயானையுரியும்போர்த்துமங்கையொடும்முடனே
சித்தர்வந்துபணியுஞ்செல்வச்சிரபுரமேயவனே. (௰)

தெங்கநீண்டசோலைசூழ்ந்தசிரபுரமேயவனை
யங்கநீண்டமறைகள்வல்லவணிகொள்சம்பந்தனுரை
பங்கநீங்கப்பாடவல்லபத்தர்கள்பாரிதன்மேற்
சங்கமோடுநீடிவாழ்வர்தன்மையினாலவரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சிரபுரமென்பதுஞ்-சீகாழிக்கொருபெயர்.

(திருச்சேய்ஞலூர் - பண்-பழந்தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

நூலடைந்தகொள்கையாலேநுன்னடிகூடுதற்கு
மாலடைந்தநால்வர்கேட்கநல்கியநல்லறத்தை
யாலடைந்தநீழல்மேவியருமறைசொன்னதென்னே
சேலடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. (௧)

நீறடைந்தமேனியின்கணேரிழையாளொருபாற்
கூறடைந்தகொள்கையன்றிக்கோலவளர்சடைமே
லாறடைந்ததிங்கள்சூடியரவமணிந்ததென்னே
சேறடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. (௨)

ஊனடைந்தவெண்டலையினோடுபலிதிரிந்து
கானடைந்தபேய்களோடுபூதங்கலந்துடனே
மானடைந்தநோக்கிகாணமகிழ்ந்தெரியாடலென்னே
தேனடைந்தசோலைமல்குசேய்ஞலூர்மேயவனே. (௩)

வீணடைந்தமும்மதிலும்வில்மலையாவரவி
னாணடைந்தவெஞ்சரத்தாலநல்லெரியூட்டலென்னே
பாணடைந்தவண்டுபாடும்பைம்பொழில்சூழ்ந்தழகார்
சேணடைந்தமாடமல்குசேய்ஞலூர்மேயவனே. (௪)

பேயடைந்தகாடிடமாப்பேணுவதன்றியும்போய்
வேயடைந்ததோளியஞ்சவேழமுரித்ததென்னே
வாயடைந்தநான்மறையாறங்கமோடைவேள்வி
தீயடைந்தசெங்கையாளர்சேய்ஞலூர்மேயவனே. (௫)

காடடைந்தவேனமொன்றின்காரணமாகிவந்து
வேடடைந்தவேடனாகிவிசயனொடெய்ததென்னே
கோடடைந்தமால்களிற்றுக்கோச்செங்கணாற்கருள்செய்
சேடடைந்தசெல்வர்வாழுஞ்சேய்ஞலூர்மேயவனே. (௬)

பீரடைந்தபாலதாட்டப்பேணாதவன்றாதை
வேரடைந்துபாய்ந்ததாளைவேர்தடிந்தான்றனக்குத்
தாரடைந்தமாலைசூட்டித்தலைமைவகுத்ததென்னே
சீரடைந்தகோயில்மல்குசேய்ஞலூர்மேயவனே. (௭)

மாவடைந்ததேரரக்கன்வலிதொலைவித்தவன்ற
னாவடைந்தபாடல்கேட்டுநயந்தருள்செய்ததென்னே

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநன்னாரோத்துபாடல்பத்துமிவைவல்லா
ருண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ள-சப்ததியாகர் தலங்களிலொன்று.
சுவாமிபெயர்-தர்ப்பாரணியர்-தேவியார்-போகமார்த்தபூண்முலையம்மை.
பதிகம் - ௪௯.

(திருவலிவலம்- பண் - பழந்தக்கராகம.)
திருச்சிற்றம்பலம்.

ஒல்லையாறியுள்ளமொன்றிக்கள்ளமொழிந்துவெய்ய
சொல்லையாறித்தூய்மைசெய்துகாமவினையகற்றி
நல்லவாறேயுன்றன்நாமநாவினவின்றேத்த
வல்லவாறேவந்துநல்காய்வலிவலமேயவனே. (க)

இயங்குகின்றவிரவிதிங்கள்மற்றுநற்றேவரெல்லாம்
பயங்களாலேபற்றிநின்பாற்சித்தந்தெளிகின்றிலர்
தயங்குசோதிசாமவேதாகாமனைக்காய்ந்தவனே
மயங்குகின்றேன்வந்துநல்காய்வலிவலமேயவனே. (உ)

பெண்டிர்மக்கள்சுற்றமென்னும்பேதைப்பெருங்கடலை
விண்டுபண்டேவாழமாட்டேன்வேதனைநோய்நலியக்
கண்டுகண்டேயுன்றனாமங்காதலிக்கின்றதுள்ளம்
வண்டுகிண்டிப்பாடுஞ்சோலைவலிவலமேயவனே. (ங)

மெய்யராகிப்பொய்மைநீக்கிவேதனையைத்துறந்து
செய்யரானார்சிந்தையானேதேவர்குலக்கொழுந்தே
ஐவராயேருமையுறனுடனாளுநலிந்துழன்றேனை
வையமுன்னேவந்துநல்காய்வலிவலமேயவனே. (௪)

துஞ்சும்போதுந்துற்றும்போதுஞ்சொல்லுவனுன்திறமே
தஞ்சமில்லாத்தேவர்வந்துன்றாளிணைக்கீழ்ப்பணிய
நஞ்சையுண்டாய்க்கென்செய்கேனோநாளுநினைந்தடியேன்
வஞ்சமுண்டென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. (௫)

புரிசடையாய்புண்ணியனேநண்ணலார்மூவெயிலு
மெரியவெய்தாயெம்பெருமானென்றிமையோர்பரவுங்
கரியுரியாய்காலகாலாநீலமணிமிடற்று
வரியரவாவந்துநல்காய்வலிவலமேயவனே. (௬)

நாபுநீயேதந்லதநீயேசங்கரனேயடியே
ஞாபுநின்பாலன்புசெய்வானுதரிக்கின்றதுள்ள
மாயமாயநாயந்தன்னுனேவர்நில்லென்றலொட்டார்
மாயமேயென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. (எ)

நீரொடுங்குஞ்செஞ்சடையாய்நின்னுடையபொன்மலையை
வேரொடும்பீழ்ந்தேந்தலுற்றவேந்தனிராவணனைத்
தேரொடும்போய்வீழ்ந்தலறத்திருவிரலாலடர்த்த
வாரொடுங்குங்கொங்கைபங்காவலிவலமேயவனே. (அ)

ஆதியாயநான்முகனுமாலுமறிவரிய
சோதியானேநீதியிலேன்சொல்லுவதுன்றிறமே
யோதிநானுமுன்னையேத்துமென்னைவினையவலம்
வாதியாமேவந்துநல்காய்வலிவலமேயவனே. (க)

* பொதியிலானேபூவணத்தாய்பொன்றிகழு[illegible]யிலைப்
பதியிலானேபத்தாசித்தம்பற்றுவிடாதவனே
விதியிலாதார்வெஞ்சமணர்சாக்கியரென்றிவர்கள்
மதியிலாதாரென்செய்வாரோவலிவலமேயவனே. (ய)

வன்னிகொன்றைமத்தஞ்சூடும்வலிவலமேயவனைப்
பொன்னிநாடன்புகலிவேந்தன்ஞானசம்பந்தன்சொன்ன
பன்னுபாடல்பத்தும்வல்லார்மெய்த்தவத்தோர்விரும்பு
மன்னுஞ்சோதியீசனோடேமன்னியிருப்பாரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-மனத்துணைநாதர்-தேவியார்-வாளையங்கண்ணி.

---

(திருச்சோபுரம் - பண்-பழந்தக்கராகம்.)

திருச்சிற்றம்பலம்.

வெங்கணானையீருரிவைபோர்த்துவிளங்குமொழி
மங்கைபாகம்வைத்துகந்தமாண்பதுவென்னைகொலாங்
கங்கையோடுதிங்கள்சூடிக்கடிகமழுங்கொன்றைத்
தொங்கலானேதூயநீற்றாய்சோபுரமேயவனே. (க)

---

* பொதியில்-என்பது பொதிகைமலை அது வைப்புத்தலங்களிலொன்று. நிகளூர் பிடவூர் கோவந்தபுத்தூர் குருக்கேத்திரம் பொதியமலை தேனூர் - என்னுஞ் செய்யுளாலுணர்க.

பையரவமணாகருதனவிம்முபருதிநியமத்துத்
தையலொடீர்பாகமமர்ந்தவனைத்தமிழ்ஞானசம்பந்தன்
பொய்யிலிமாலைபுனைந்தயத்துப்பரவிப்புகழ்ந்தேத்த
வையுறவில்லைப்பிறப்பறுத்தலவலம்மடையாவே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பருதியப்பர் தேவியார் மங்களநாயகியம்மை.

---

(திருக்கலிக்காமூர்-பண்-பழம்பஞ்சுரம்.)

திருச்சிற்றம்பலம்.

மடல்வரையின்மதுவிம்முசோலைவயல்சூழ்ந்தழகாருங்
கடல்வரையோதங்கலந்துமுத்தஞ்சொரியுங்கலிக்காமூ
ருடல்வரையின்னுயிர்வாழ்க்கையாயவொருவன்கழலேத்த
விடர்தொடராவினையானசிந்துமிறைவன்னருளாமே. (௧)

மைவரைபோற்றிரையோடுகூடிப்புடையேமலிந்தோதங்
கைவரையால்வளர்சங்கமெங்குமிகுக்குங்கலிக்காமூர்
மெய்வரையான்மகள்பாகன்றன்னைவிரும்பவுடல்வாழு
மைவரையாசறுத்தாளுமென்பரதுவுஞ்சரதமே. (௨)

தூவியநீர்மலரேந்திவையத்தவர்கடொழுதேத்தக்
காவியனேர்விழிமாதரென்றுங்கவினார்கலிக்காமூர்
மேவியவீசனையெம்பிரானைவிரும்பிவழிபட்டா
லாவியுணீங்கலன்றிமூர்த்தியமரர்பெருமானே. (௩)

குன்றுகள்போற்றிரையுந்தியந்தண்மணியார்தரமேதி
கன்றுடன்புல்கியாயம்மனைசூழ்கவினார்கலிக்காமூ
ரொன்றுணருஞ்சியும்வாழுமெந்தைபெருமானடியேத்தி
நின்றுணர்வாரைநினையகில்லார்நீசர்நமன்றமரே. (௪)

வானிடைவாண்மதிமாடந்தீண்டமருங்கேகடலோதங்
கானிடைநீழலிற்கண்டல்வாழுங்கழிசூழ்கலிக்காமூ
ரானிடையைந்துகந்தாடினானையமரர்தொழுதேத்த
நானடைவாம்வணமின்பதந்தநலமேநினைவோமே. (௫)

துறைவளர்கேதகைமீதுவாசஞ்சூழ்வான்மலிதென்றல்
கறைவளருங்கடலோதமென்றுங்கலிக்குங்கலிக்காமூர்
மறைவளரும்பொருளாயினானைமனத்தானினைந்தேத்த
நிறைவளரும்புகழெய்தும்வாதைநினையாவினைபோமே. (௬)

கோலநன்மேனியின்மாதர்மைந்தர்கொணர்மங்கிலியத்திற்
காலமும்பொய்க்கிலுந்தாம்வழுவாதியற்றுங்கலிக்காமூர்
ஞாலமுந்தீவளிஞாயிறுமாயநம்பன்கழலேத்தி
யோலமிடாதவருழியென்றுமுணர்வைத்துறந்தாரே. (எ)

ஊரரவந்தலைநீண்முடியாயொலிநீருலகாண்டு
காரரவக்கடல்சூழவாழும்பதியாங்கலிக்காமூர்
தேரரவல்குலம்பேதையஞ்சத்திருந்துவரைபேர்த்தா
னாரவம்படவைத்தபாதமுடையானிடமாமே. (அ)

அருவரையேந்தியமாலுமற்றையலர்மேலுறைவானு
மிருவருமஞ்சவெரியுருவாயெழுந்தான்கலிக்காமூ
ரொருவரையான்மகள்பாகன்றன்னையுணர்வாற்றொழுதேத்தத்
திருமருவுஞ்சிதைவில்லைச்செம்மைத்தேசுண்டவர்பாலே. (௯)

மாசுபிறக்கியமேனியாருமருவுந்துவராடை
மீசுபிறக்கியமெய்யினாருமறியாரவர்தோற்றங்
காசினிநீர்த்திரண்மண்டியெங்கும்வளமார்கலிக்காமூ
ரீசனையெந்தைபிரானையேத்திநினைவார்வினைபோமே. (௰)

ஆழியுணஞ்சமுதாரவுண்டன்றமரர்க்கமுதுண்ண
ஊழிதோறுமுளராவளித்தானுலகத்துயர்கின்ற
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னதமிழார்கலிக்காமூர்
வாழியெம்மானைவணங்கியேத்தமருவாபிணிதானே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சுந்தரேசுவரர்-தேவியார்-அழகுவனமுலையம்மை.

---

(திருவலஞ்சுழி-பண்-பழம்பஞ்சுரம்.)

திருச்சிற்றம்பலம்.

பள்ளமதாயபடர்சடைமேற்பயிலுந்திரைக்கங்கை
வெள்ளமதாரவிரும்பிநின்றவிகிர்தன்விடையேறும்
வள்ளல்வலஞ்சுழிவாணனென்றுமருவிநினைந்தேத்தி
யுள்ளமுருகவுணருமின்களுறுநோயடையாவே. (௧)

காரணிவெள்ளைமதியஞ்சூடிக்கமழ்புன்சடைதன்மேற்
றாரணிகொன்றையுந்தண்ணெருக்குந்தழையுந்தழைவித்து
வாரணிகொங்கைநல்லாளோடும்வலஞ்சுழிமேவியவ
ரூரணிபெய்ப்பலிகொண்டுகந்தவகையறியோமே. (௨)

பொன்னியலுந்திருமேனிதன்மேற்புரிநூல்பொலிவித்து
மின்னியலுஞ்சடைதாழவேழவுரிபோர்த்தரவாட
மன்னியமாமறையோர்கள்போற்றும்வலஞ்சுழிவாணர்தம்மே
லுன்னியசிந்தையினீங்ககில்லார்க்குயர்வாம்பிணிபோமே. (௩)

விடையொருபாலொருபால்விரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொடாழ்குழல்போற்றிசைப்ப
நடையொருபாலொருபாற்சிலம்புநாளும்வலஞ்சுழிசே
ரடையொருபாலடையாதசெய்யுஞ்செய்கையறியோமே. (௪)

கையமரும்மழுநாகம்வீணைகலைமான்மறியேந்தி
மெய்யமரும்பொடிப்பூசிவீகுகுழையார்தருதோடும்
பையமரும்மரவாடலாடும்படர்சடையார்க்கிடமா
மையமரும்பொழிற்சூழும்வேலிவலஞ்சுழிமாநகரே. (௫)

தண்டொடுசூலந்தழையவேந்தித்தையலொருபாகங்
கண்டிடுபெய்பலிபேணிநாணார்கரியினுரிதோலர்
வண்டிடுமொய்பொழிற்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவர்
தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடாலைத்தொடர்வோமே. ௬

க[illegible]லியலுட்[illegible]லையந்தைநீங்கவிளைதருவினையாதார்
செ[illegible]லியலுட்மதிலிமூன்றுஞ்செற்றசுடராணிடர்நீடக
[illegible]ப்பயனு[illegible]திரடோளெட்[illegible]மாதிவலஞ்சுழிமாநகரே
ப[illegible]லையம்வந்த[illegible]எப்புங்கிபேத்தியிருப்பவர்பு[illegible]லியபரே. ( [illegible] )

வெஞ்சினவாளரக்கன்வரையைபவிறலாலெடுத்தானைமுரு
டொருங்குமோராதிருநாளுமொன்றுமடர்த்தாரபூதாய
நஞ்சிருள்கண்டத்துநாதரொன்றுநணுகுமிடம்போலு
மஞ்சுலவும்பொழில்வண்டுகிண்டும்வலஞ்சுழிமாநகரே. (௮)

ஏடியனான்முகன்சீர்நெடுமாலெனநின்றவர்காணா
கூடியகூரொரியாய்நிமிர்ந்தகுழகருலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயவெம்மான்
பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. (௯)

குண்டரும்புத்தருங்கூறையின்றிக்குழுவாருணாநீத்துத்
தொண்டருந்தன்றொழில்பேணநின்றகழலானழலாடி
வண்டமரும்பொழின்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெம்மான்
பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. (௰)

வாழியெம்மானெனக்கெந்தைமேயவலஞ்சுழிமாநகர்மேற்
காழியுண்ஞானசம்பந்தன்சொன்னகருத்தின்றமிழ்மாலை
யாழியிவ்வையகத்தேத்தவல்லாரவர்க்குந்தமருக்கு
மூழியொருபெருமின்பமோர்க்கும்முருவும்முயர்வாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருநாரையூர்-பண்-பழம்பஞ்சுரம்.)

திருச்சிற்றம்பலம்.

கடலிடைவெங்கடுநஞ்சமுண்டகடவுள்விடையேறி
யுடலிடையிற்பொடிப்பூசவல்லானுமையோடொருபாக
னடலிடையிற்சிலைதாங்கியெய்தவம்மானடியார்மே
னடலைவினைத்தொகைதீர்த்துகந்தானிடநாரையூர்தானே. (௧)

விண்ணின்மின்னேர்மதிதுத்திநாகம்விரிபூமலர்க்கொன்றை
பெண்ணின்முன்னேமிகவைத்துகந்தபெருமானெரியாடி
நண்ணியதன்னடியார்களோடுந்திருநாரையூரானென்
றெண்ணுமினும்வினைபோகும்வண்ணமிறைஞ்சுந்நிறைவாமே. (௨)

தோடொருகாதொருகாதுசேர்ந்தகுழையானிழைதோன்றும்
பீடொருகாற்பிரியாதுநின்றபிறையான்மறையோதி
நாடொருகாலமுஞ்சேரநின்றதிருநாரையூரானைப்
பாடுமினீர்பழிபோகும்வண்ணம்பயிலுமுயர்வாமே. (௩)

வெண்ணிலவஞ்சடைசேரவைத்துவிளங்குந்தலையேந்திப்
பெண்ணிலமர்ந்தொருகூறதாயபெருமானருளார்ந்த
அண்ணன்மன்னியுறைகோயிலாகுமணிநாரையூர்தன்னை
நண்ணலமாந்துயராக்குமின்கண்ணடலைகரிசறுமே. (௪)

வானமர்தீவளிநீர்நிலனாய்வழங்கும்பழியாகு
மூனமரின்னுயிர்தீங்குகுற்றமுறைவாற்பிறிதின்றி
நானமரும்பொருளாகிநின்றான்றிருநாரையூரெந்தை
கோனவனைக்குறுகக்குறுகாகொடுவல்வினைதானே. (௫)

கொக்கிறகுங்குளிர்சென்னிமத்தங்குலாயமலர்சூடி
யக்கரவோடரையார்த்துகந்தவழகன்குழகாக
நக்கமருந்திருமேனியாளன்றிருநாரையூர்மேவிப்
புக்கமரும்மனத்தோர்கடம்மைப்புணருப்புகறானே. (௬)

மறைவழக்கமிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயத்திருவுள்ளமே
மறியுலாங்கையின்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

அறுத்தவங்கமாறாயினநீர்மையைக்
கறுத்தவாழமண்கையர்கடம்மொடுஞ்
செறுத்துவாதுசெயத்திருவுள்ளமே
முறித்தவான்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

அந்தணாளர்புரியுமருமறை
சிந்தைசெய்யாவருகர்திறங்களைச்
சிந்தவாதுசெயத்திருவுள்ளமே
வெந்தநீறதணியும்விகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

வேட்டுவேள்விசெய்யும்பொருளைவிளி
மூட்டுசிந்தைமுருட்டமண்குண்டரை
யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே
காட்டிலானையுரித்தவெங்கள்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென் னாலவாயிலுறையுமெம்மாதியே.

அழலதோம்புமருமறையோர்திறம்
விழலதென்றருகர்திறத்திறங்
கழலவாதுசெயத்திருவுள்ளமே
தழலிலங்குதிருவுருச்சைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

நீற்றுமேனியராயினர்மேலுற்ற
காற்றுக்கொள்ளவுநில்லாவமணரைத்
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே
யாற்றவாளரக்கற்குமருளினாய்
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்- னாலவாயிலுறையுமெம்மாதியே.

நீலமேனியமணர்திறத்துநின்
சீலம்வாதுசெயத்திருவுள்ளமே

மாலுநான்முகனுங்காண்பரியதோர்
கோலமேனியதாகியகுன்றமே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

அன்றுமுப்புரஞ்செற்றவழகநின்
றுன்றுபொற்கழல்பேணவருகரைத்
தென்றவாறுசெயத்திருவுள்ளமே
கன்றுசாக்கியர்காணத்தலைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்-னாலவாயிலுறையுமெம்மாதியே.

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு
வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர்பாக்கியவாளரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

{ திருக்கயிலாயமும்-திருவானைக்காவும்-திருமயேந்திரமும்-
திருவாரூரும்-கூடச்சதுக்கம். }

திருச்சிற்றம்பலம்.

மண்ணதுவுண்டரிமலரோன்காணு
வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணதுவோங்கியகயிலையாரு
மண்ணலாரூராதியானைக்காவே. (௧)

வந்துமாலயனவர்காண்பரியார்
வெந்தவெண்ணீறணிமயேந்திரரு
கந்தவார்சடையுடைக்கயிலையாரு
மந்தணாரூராதியானைக்காவே. (௨)

மாலயன்றேடியமயேந்திரருங்
காலனையுயிர்கொண்டகயிலையாரும்
வேலையதோங்கும்வெண்ணாவலாரு
மாலையாரூராதியானைக்காவே. (௩)

கருடனையேறரியயனோர்காணார்
வெருள்விடையேறியமயேந்திரருங்
கருடருகண்டத்தெங்கயிலையாரு
மருளனாரூராதியானைக்காவே. (௪)

மதிருதனான்முகன்வணங்கரியார்
மதியதுசொல்லியமையேந்திரருங்
கதிர்முலைபுல்கியகயிலையாரு
மதியனாரூராதியானைக்காவே. (௫)

சக்கரம்வேண்டுமால்பிரமன்காணு
மிக்கவர்கயிலைமையேந்திராருந்
தக்கனைத்தலையரிதழலுருவ
ரக்கணியவராரூராதியானைக்காவே. (௬)

கண்ணனுநான்முகன்காண்பரியார்
வெண்ணாவல்விரும்புமையேந்திரருங்
கண்ணப்பர்க்கருள்செய்தகயிலையெங்க
ளண்ணலாரூராதியானைக்காவே. (௭)

கடல்வண்ணனான்முகன்காண்பரியார்
தடவரையரக்கனைத்தலைநெரித்தார்
விடமதுவுண்டவெம்மையேந்திரரும்
மடல்விடையாரூராதியானைக்காவே. (௮)

ஆதிமாலயனவர்காண்பரியார்
வேதங்கடுதிசெயமையேந்திரருங்
காதிலொருகுழையுடைகயிலையாரு
யாதியாரொந்தையானைக்காவே. (௯)

அறிவிலமண்புத்தரறிவுகொள்ளேல்
வெறியமான்கரத்தாரூர்மையேந்திரரு
மறிகடலோனயன்றேடத்தானு
மறிவரியகயிலையோனானைக்காவே. (௰)

ஏனமாலயனவர்காண்பரியார்
கானமார்கயிலைநன்மையேந்திரரு
மானவாரூராதியானைக்காவை
ஞானசம்பந்த[illegible]தமிழ்சொல்லுமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ_ பதிகம் - ௱௮.

---

விளங்குநான்மறைவல்லவேதியர்மல்குசீர்வளர்மிழலையானடி
யுளங்கொள்வார்தமையுளங்கொள்வார்வினையொல்லையாசறுமே. (௨)

விசையினோடெழுபசையுநஞ்சினையசைவுசெய்தவன்மிழலைமாநக
ரிசையுமீசனைநசையின்மேவினானிசைசெயாவினையே. (௩)

வென்றிசேர்கொடிமூடுமாமதின்மிழலைமாநகர்மேவிநாடொறு
நின்றவாதிதன்னடிநினைப்பவர்துன்பமொன்றிலரே. (௪)

போதகந்தனையுரிசெய்தோன்புயநேர்வருப்பொழின்மிழலைமாநக
ராதரஞ்செய்தவடிகள்பாதமலாலோர்பற்றிலமே. (௫)

தக்கன்வேள்வியைச்சாடினார்மணிதொக்கமாளிகைமிழலைமேவிய
நக்கனாரடிதொழுவர்மேல்வினைநாடொறுங்கெடுமே. (௬)

போரணவுமுப்புரமெரித்தவன்பொழில்கள்சூழ்தருமிழலைமாநகர்ச்
சேருமீசனைச்சிந்தைசெய்பவர்தீவினைகெடுமே. (௭)

இரக்கமிற்றொழிலரக்கனுடனெருக்கினான்மிகுமிழலையானடி
சிரக்கொள்பூவெனவொருக்கினார்புகழ்பரக்குநீள்புவியே. (௮)

துன்றுபூமகன்பன்றியானவனொன்றுமோர்கிலாமிழலையானடி
சென்றுபூப்புனலின்றுதூவினார்நன்றுசேர்பவரே. (௯)

புத்தர்புன்சமணமிலைத்தர்பொய்க்குரைவைத்தவித்தகன்மிழலைமாநகர்
சித்தம்வைத்தவரித்தலத்தினுள்மெய்த்தவத்தவரே. (௰)

சந்தமார்பொழின்மிழலையீசனைச்சண்பைஞானசம்பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ்பத்தும்வல்லவர்பத்தராகுவரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருப்பல்லவனீச்சரம்-௭௩.)

திருச்சிற்றம்பலம்.

பரசுபாணியர்பாடல்வீணையர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தரசுபேணிநின்றாரிவர்தன்மையறிவாரார். (௧)

பட்டநெற்றியர்நட்டமாடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திட்டமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௨)

பவளமேனியர்திகழுநீற்றினர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தழகராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௩)

பண்ணில்யாழினர்பயிலுமொந்தையர் பட்டினத்துறைபல்லவனீச்ச
ரத், தண்ணலாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௪)

பல்லிலோட்டினர்பலிகொண்டுண்பவர் பட்டினத்துறைபல்லவனீச்சு
ரத், தெல்லியாட்டுகந்தாரிவர்தன்மையறிவாரார். (௫)

பச்சைமேனியர்பிச்சைகொள்பவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
திச்சையாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௬)

மைபங்கணெற்றினர்திங்கள்சூடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தெங்குமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௭)

பாதங்கைதொழவேதமோதுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
தாதியாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௮)

படிகொண்மேனியர்கடிகொள்கொன்றையர் பட்டினத்துறைபல்லவ
னீச்சரத், தடிகளாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௯)

பறைகொள்பாணிபர்பிறைகொள்சென்னியர்பட்டினத்துறைபல்லவ
னீச்சரத், திறைவராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். (௰)

வானமாள்வதற்கூனமொன்றிலைமாதர்பல்லவனீச்சரத்தானை
ஞானசம்பந்தனற்றமிழ்சொல்லவல்லவர்நல்லரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருக்கழுமலம்-திருவியமகம்.)

திருச்சிற்றம்பலம்.

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருண்மெய்யினையே
கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்வதுகாமனையே
அற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே
பெற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரத்தையுகந்தனையே. (௧)

சதியிமிகவந்தசலந்தரனேதடிசிரநேர்கொள்சலந்தரனே
அதிரொளிசேர்திகிரிப்படையாலமர்ந்தனரும்பர்துதிப்படையால்
மதிதவழ்வெற்பதுகைச்சிலையேமருவிடமேற்பதுகைச்சிலையே
விதியினிலிட்டவிரும்பரனேவேணுபுரத்தைவிரும்பரனே. (௨)

காதமரத்திகழ்தோடினனேகானவனாய்க்கடிதோடினனே
பாதமதாற்கூற்றுதைத்தனனேபார்த்தனுடலம்புதைத்தனனே
தாதவிழ்கொன்றைதரித்தனனேசார்ந்தவினையதரித்தனனே
போதமமருமுனாட்பொருளேபுகலியமர்ந்தபராப்பொருளே (௩)

மைத்திகழ்நஞ்சுமிழ்மாசுணமேமகிழ்ந்தணைசேர்வதுமாசுணமே
மெய்த்துடல்பூசுவர்மேன்மதியேவேதமதோதுவர்மேன்மதியே
பொய்த்தலையோடொருமத்தமதேபுரிசடைவைத்ததுமத்தமதே
வித்தகராகியவெங்குருவேவிரும்பியமர்ந்தனர்வெங்குருவே. (௪)

உடன்பயில்கின்றனன்மாதவனேயுறுபொறிகாய்ந்திசைமாதவனே
திடம்படமாமறைகண்டனனேதிரிகுணமேவியகண்டனனே.
படங்கொளரவணைசெய்தனனேபகட்டுரிகொண்டரைசெய்தனனே
தொடர்ந்ததுயர்க்கொருநஞ்சிவனேதோணிபுரத்துறைநஞ்சிவனே. ௫

திகழ்கையதும்புகைதங்கழலேதேவர்தொழுவதுந்தங்கழலே
இகழ்பவர்தாமொருமானிடமேயிருந்தனுமேவொடெழின்மானிடமே
மிகவருநீர்கொளுமஞ்சடையேமின்னிகர்கின்றதுமஞ்சடையே
தகவிரதங்கொள்வர்சுந்தரரேதக்கதராபுறைசுந்தரரே. (௬)

ஓர்வருகண்களிணைக்கயலேயுமையவள்கண்களிணைக்கயலே
யேர்மருவுங்கழனாகமதேயெழில்கொளுதாசனனாகமதே
நீர்வருகொந்தளகங்கையதேநெடுஞ்சடைமேவியகங்கையதே
சேர்வருயோகதியம்பகனேசிரபுரமேயதிகட்பகனே. (௭)

ஈண்டுதுயிலமர்ப்பினனேயிருங்கணிடந்தடியப்பினனே
நீண்டலரும்பரிசக்கரமேநிகழ்ந்தொளிசேர்வதுசக்கரமே
வேண்டிவருந்தநகைத்தலையேமிகைத்தவரோடுநகைத்தலையே
பூண்டனர்சேரலுமாபதியேபுறவமமர்ந்ததுமாபதியே. (௮)

நின்மணிவாயதுநீழலையேநேசமதானவர்நீழலையே
யுன்னிமனத்தெழுசங்கமதேயொளியதமேற்றுறுசங்கமதே
கன்னியராக்கவருங்களனேகடல்விடமுண்டகருங்களனே
மன்னிவராப்பதிசண்பையதேவாரிவயன்மலிசண்பையதே. (௯)

இலங்கையரக்கர்தமக்கிறையேயிடந்துகயிலையெடுக்கிறையே
புலன்கள்கெடவுடன்பாடினனேபொறிகள்கெடவுடன்பாடினனே
இலங்கியமேனியிராவணனேயெய்துபெயருமிராவணனே
கலந்தருள்பெற்றதுமாவசியேகாழியானடிமாவசியே. (௰)

கண்ணிகள்புண்டரிகத்தினனேகலந்திரிபுண்டரிகத்தினனே
மண்ணிகழும்பரிசேனமதேவானகமேய்வகைசேனமதே
நண்ணிப்படிமுடியெய்தலரேநளிர்மலிசோலையிலெய்தலரே
பண்ணியல்கொச்சைப்பசுபதியேபசுமிகவூர்வர்பசுபதியே. (௰௧)

பருமதின்மதுரைமன்னவையெதிரேபதிகமதெழுதியிலையவையெதிரே
வருநதியிடையிசைவருகரணேவசையொடுமலர்கெடவருகரணே
கருதலின்மிசைமுராரருமருளேகழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியேவல்லவர்தம்மிடர்திடமொழியே. ௰௨

திருச்சிற்றம்பலம்.

---

(திருவேகம்பம்-திருஇயமகம்)

திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருணுண்பொருளாதியேயாலநீழலரும்பொருளாதியே
காயவின்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. (௧)

சடையணிந்ததுவெண்டலைமாலையேதம்முடம்பிலும்வெண்டலை
மாலையே, படையிலங்கையிற்சூலமதென்பதேபரந்திலங்கையிற்சூல
மதென்பதே, புடைபரப்பனபூதகணங்களேபோற்றிசைப்பனபூத
கணங்களே, கடைகடோறுமிரப்பதுமிச்சையேகம்பமேவியிருப்ப
துமிச்சையே. (௨)

வெள்ளெருக்கொடுதும்பைமிலைச்சியேவேறுமுன்செலத்தும்பைப்
யள்ளுநீறதுபூசுவதாகமேயானமாகணமூசுவதாகமே [லைச்சியே
புள்ளியாடையுடுப்பதுகத்துமேபோனவூழியுடுப்பதுகத்துமே
கள்ளுலாமலர்க்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௩)

முற்றலாமையணிந்தமுதல்வரோமூரியாமையணிந்தமுதல்வரோ
பற்றிவாளரவாடும்பரிசரோபாலுநெய்யுகந்தாடும்பரிசரோ
வற்றலோடுகலம்பலிதேர்வதேவானினேறுகலம்பலிதேர்வதே
கற்றிலாமனங்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௪)

வேடனாகிவிசையற்கருளியேவேலைநஞ்சமிசையற்கருளியே
யாடுபாம்பணையார்த்ததுடையதேயஞ்சுபூதமுமார்த்ததுடையதே
கோடுவான்மதிக்கண்ணியழகிதேகுற்றமில்மதிக்கண்ணியழகிதே
காடுவாழ்பதியாவதுமும்மதேகம்பமாபதியாவதுமும்மதே. (௫)

இரும்புகைக்கொடிதங்குழல்கையதேயிமயமாமகடங்குழல்கை
யதே, யரும்புமொய்த்தமலர்ப்பொறைதாங்கியேயாழியான்றன்மலர்
ப்பொறைதாங்கியே, பெரும்பகனடமாடுதல்செய்துமேபேதைமார்
மனம்வாடுதல்செய்துமே, கரும்புமொய்த்தெழுகம்பமிருப்பதே
காஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. (௬)

முதிரமங்கைதவஞ்செய்தகாலமேமுன்புமங்கைதவஞ்செய்தகாலமே
வெதிர்களோடகில்சந்தமுருட்டியேவேழமோடகில்சந்தமுருட்டியே
பதிரவாறுவரத்தெழுவத்தொடேயானைபாடுவரத்தெழுவத்தொடே
கதிர்கொள்பூண்முலைக்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே.

பண்டரக்கனெடுத்தபலத்தையேபாய்ந்தரக்கனெடுத்தபலத்தையே
கொண்டரக்கியதுங்கால்விரலையேகோளரக்கியதுங்கால்விரலையே
யுண்டுழன்றதுமுண்டத்தலையிலேயுடுபதிக்கிடமுண்டத்தலையிலே
கண்டநஞ்சமடக்கினைகம்பமே கடவுணீயிடங்கொண்டதுகம்பமே.

தூணியானசுடர்விடுசோதியேசுத்தமானசுடர்விடுசோதியே
பேணியோடுபிரமப்பறவையேபித்தனைபிரமப்பறவையே
சேணினோடுகீழூழிதிரிந்துமேசித்தமோடுகீழூழிதிரிந்துமே .
காணநின்றனருற்றதுகம்பமேகடவுணீயிடமுற்றதுகம்பமே. (௯)

ஒருடம்பினையீருருவாகவேயுன்பொருட்டிறமீருருவாகவே
யாருமெய்தற்கரிதுபெரிதுமேயாற்றலெய்தற்கரிதுபெரிதுமே
தோரும்மறியாதுதிகைப்பரோசித்தமும்மறியாதுதிகைப்பரோ
கார்நிறத்தமணர்க்கொருகம்பமேகடவுணீயிடங்கொண்டதுகம்பமே.

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரன்றன்விரும்பிப்புகலியே
யந்தமில்பொருளாயினகொண்டுமேயண்ணலின்பொருளாயினகொண்
டுமே, பந்தனின்னியல்பாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே.

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர்-ஏகாம்பரநாதர்-தேவியார்-காமாக்ஷியம்மை.

---

(திருவாலவாய் - திருஇயமகம்.)
திருச்சிற்றம்பலம்.

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனே பாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
யாலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே. (௧)

பாதியாயுடன்கொண்டதுமாலையேபாம்புதார்மலர்க்கொன்றைநன்மா
லையே, கோதினீறதுபூசிடுமாகனேகொண்டநற்கையின்மானிடமாக
னே, நாதனுமொருமாடுவதானையே நாடியன்றுரிசெய்ததுமானையே
வேதநூல்பயில்கின்றதுவாயிலேவிகிர்தனூர்திருவாலநல்வாயிலே. (௨)

காடுநீடதுறப்பலகத்தனேகாதலானினைவார்தமக்கத்தனே
பாடுபேயொடுபூதமசிக்கவேபல்பிணத்தசைநாடியசிக்கவே
நீடுமாநடமாடவிருப்பனேநின்னடித்தொழநாளுமிருப்பனே
யாடனீள்சடைமேவியவப்பனேயாலவாயினின்மேவியவப்பனே. ௩.

பண்டயன்றலையொன்றுமறுத்தியேபாதமோதினர்பாவமறுத்தியே
துண்டவெண்பிறைசென்னியிருத்தியேதூயவெள்ளெருதேறியிருத்தி
கண்டுகாமனைவேவவிழித்தியேகாதலில்லவர்தம்மையிழித்தியே [யே
யண்டநாயகனேமிகுகண்டனேயாலவாயினின்மேவியகண்டனே. (௪)

சென்றதாதையுகுத்தனன்பாலையேசிறியன்புசெகுத்தனன்பாலையே
வென்றிசேர்மழுக்கொண்டுமுன்காலையே வீடவெட்டிடக்கண்டுமுன்
காலையே, நின்றமாணியையோடினகங்கையானிலவமல்கிடுநித்தனகங்
கையா, லன்றுநின்னுருவாகத்தடவியேயாலவாயரனாகத்தடவியே. (௫)

நக்கமேகுவர்நாடுமோரூருமேநாதன்மேனியின்மாசுணமூருமே
தக்கபூமனைச்சுத்தக்கருளொடேதாரமுய்த்ததுபாணற்கருளொடே
மிக்கதென்னவன்றேவிக்கணியையே மெல்லநல்கியதொண்டர்க்கணி
யையே, யக்கினாரமுதுண்கலனோடுமேயாலவாயரனாருமையோடுமே.

வெய்யவன்பல்லுகுத்ததுகுட்டியே வெங்கண்மாசுணங்கையது
குட்டியே,ஐயனேயனலாடியமெய்யனேயன்பினானினைவார்க்கருண்
மெய்யனே, வையமுய்யவன்றுண்டதுகாளமே வள்ளல்கையதுமே
வுகங்காளமே, ஐயமேற்பதுலாப்பதுவீணையேயாலவாயரன்கைய
துவீணையே. (௭)

தோள்கள்பத்தொடுபத்துமயக்கியே தொக்கதேவர்செருக்கையடக்கி
வாளரக்கனிலத்துகளித்துமேவந்தமால்வரைகண்டுகளித்துமே [யே
நீள்பொருப்பையெடுத்தவுன்மத்தனேநின்விரற்றலையான்மதமத்தனே
யாளுமாதிமுறித்ததுமெய்கொலோவாலவாயரனுய்த்ததுமெய்கொலோ

பங்கயத்துளநான்முகன்மாலொடேபாதநீண்முடிநேடிடமாலொடே
துங்கநற்றழலின்னுருவாயுமேதூயபாடல்பயின்றதுவாயுமே
செங்கயற்கணினாரிடுபிச்சையே சென்றுகொண்டுணாசெய்வதுபிச்சை
யே, யங்கியைத்திகழ்விப்பதிடக்கையேயாலவாயரனாரிடக்கையே. ௯

தேரரோடமணர்க்குநல்காலையேதேவர்நாடொறுஞ்சேர்வதுகாலையே
கோரமட்டதுபுண்டரிகத்தையேகொண்டநீள்கழல்புண்டரிகத்தையே
நேரிலூர்களழித்ததுநாகமேநீள்சடைத்திகழ்கின்றவுநாகமே
யாரமாகவுகந்ததுமென்பதேயாலவாயரனாரிடமென்பதே. (௰)

ஞனஞானிகடம்மொடுவிரகனே யேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே, யானகாழியுண்ஞானசம்பந்தனே யாலவாயினின்மேயசம்பந்தனே, யானவானவர்வாயிலுளத்தனேயன்பரானவர்வாயிலுளத்தனே. தானுரைத்தனசெந்தமிழ்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - ௩௰௪.

---

(திருவீழிமிழலை-திருஇயமகம்.)

திருச்சிற்றம்பலம்.

துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடக்கையதே
யென்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
நின்றதும்மிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுமுள்ளுமே. (௧)

ஒதிவாயதும்மறைகளேயுரைப்பதும்பலமறைகளே
பாதிகொண்டதும்மாதையேபணிகிறேன்மிகுமாதையே
காதுசேர்கனங்குழையரோகாதலார்கனங்குழையரோ
வீதிவாய்மிகும்வேதியாமிழலைமேவியவேதியா. (௨)

பாடுகின்றபண்டாரமேபத்தரன்னபண்டாரமே
சூடுகின்றதும்மத்தமேதொழுதவென்னையுன்மத்தமே
நீடுசெய்வதுந்தக்கதேநின்னைநாத்திகழ்ந்தக்கதே
நாடுசேர்மிழலையூருமேநாகநஞ்சழலையூருமே. (௩)

கட்டுகின்றகழனாகமேகாய்ந்ததுமதனாகமே
யிட்டமாவதிசைபாடலேயிசைந்தநூலினமர்பாடலே
கொட்டுவான்முழவம்வாணனேகுலாயசீர்மிழலைவாணனே
நட்டமாடுவதுசந்தியேநானுய்தற்கிரவுசந்தியே. (௪)

ஓவிலாதிடுங்கரணமேயுன்னுமென்னுடைக்கரணமே
யேவுசேர்வுநின்னாணையேயருளினின்றபொற்றாணையே
பாவியாதுரைமெய்யிலேபயின்றநின்னடிமெய்யிலே
மேவினன்பிறைக்கண்ணனேமிழலைமேயமுக்கண்ணனே. (௫)

வாய்ந்தமேனியெரிவண்ணமேமகிழ்ந்துபாடுவதுவண்ணமே
காய்ந்துவீழ்ந்தவன்காலனேகடுநடஞ்செயுங்காலனே
போந்ததெம்மிடையிரவிலேயும்மிடைக்கள்ளமிரவிலே
மேய்ந்ததும்மிழலையென்பதேவிரும்பியேயணிவதென்பதே (௬)

அப்பியன்றகண்ணயனுமேயமரர்கோமகனுமயனுமே
யொப்பிலின்றமார்தருவதேயொண்கையாலமார்தருவதே
மெய்ப்பயின்றவரிருக்கையேமிழலையூருமதிருக்கையே
செப்புமின்னிருந்துமேயுமேசேர்வுமக்கெருந்துமேயுமே. (௭)

தானவக்குலம்விளக்கியேதாரகைச்செலவிளக்கியே
வானடர்த்தகயிலாயமேவந்துமேவுகயிலாயமே
தானெடுத்தவல்லரக்கனேதடமுடித்திரளரக்கனே
மேனடைச்செலவிருப்பனேமிழலைநற்பதிவிருப்பனே. (௮)

காயமிக்கதொருபன்றியேகலந்தநின்னவுருபன்றியே
மேயவிட்டவிடயங்கவேயிருவர்தாமனமயங்கவே
தூயமெய்த்திரளகண்டனேதோன்றிநின்றமணிகண்டனே
மேயவித்துயில்விலக்கணாமிழலைமேவியவிலக்கணா. (௯)

கஞ்சியைக்குலவுகையரோகலக்கமாரமணர்கையரோ
யஞ்சவாதிலருள்செய்யநீயணைந்திடம்பரிசுசெய்யநீ
வஞ்சனேவரவும்வல்லையேமதித்தெனைச்சிறிதும்வல்லையே
வெஞ்சலின்றிவருவித்தகாமிழலைசேருவிறல்வித்தகா. (௰)

மேயசெஞ்சடையினப்பனேமிழலைமேவியவென்னப்பனே
யேயுமாசெயவிருப்பனேயிசைந்தவாசெயவிருப்பனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசம்பந்தனே
வாயுரைத்ததமிழ்பத்துமேவல்லவர்க்குமிவைபத்துமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(ஸ்ரீகாழி-திருமாலைமாற்று)

திருச்சிற்றம்பலம்.

யாமாமாநீயாமாமாயாழீகாமாகாணாகா
காணாகாமாகாழீயாமாமாயாநீமாமாயா. (௧)

யாகாயாழீகாயாகாதாயாராராதாயாயா
யாயாதாராராயாதாகாயாழீகாயாகா. (௨)

தாவாமூவாதாசாகாழீநாதாநீயாமாமா
மாமாயாநீதாநாழீகாசாதாவாமூவாதா. (௩)

நீவாவாயாகாயாழீகாவாவானோவாராமே
மேராவானோவாகாழீயாகாயாவாவாநீ. (௪)

யாகாலாமேயாகாழீயாமேதாவீதாயாவீ
வீயாதாவீதாமேயாழீகாயாமேலாகாயா. (௫)

மேலேபோகாமேதேழீகாலாலேகாலானாயே
யேனாலாகாலேலாகாழீதேமேகாபோலேமே. (௬)

நீயாமாநீயேயாமாதாவேழீகாநீதானே
னேதாநீகாழீவேதாமாயாயேநீமாயாநீ. (௭)

நேணவராவிழயாசைழியேவேகதளேரியளாயுழிகா
காழியுளாயரிளேதகவேயேழிசையாழவிராவணனே. (௮)

காலேமேலேகாணீகாழீகாலேமாலேமேபூ
பூமேலேமாலேகாழீகாணீகாலேமேலேகா. (௯)

வேரியுமேணவகாழியொயேயேனைநிணேமடளோகரதே
தேரகளோடமணேநினையேயேயொழிகாவணமேயுரிவே. (௰)

நேரகழாமிதயாசழிதாயேனனியேனனிளாயுழிகா
காழியுளானினையேனினயேதாழிசயாதமிழாகரனே. (௰௧)

திருச்சிற்றம்பலம்

---

(திருக்கழுமலம் - பண் - புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

மடமலிகொன்றைதுன்றுவாளெருக்கும் வன்னியுமத்தமுஞ்சடைமே
டபடலொலிதிரைகங்கைமோதியகங்கைத்தலைவரூர்தப்பிடம்பகரில் [ற்
விடலொலிபரந்தவெண்டிரைமுத்தமிப்பிகள் கொணர்ந்துவெள்ளரு
வி, கடலொலிபோதமோதவந்தலைக்குங்கழுமலநகரெனலாமே. (௧)

மின்னியவரவும்வெறிமலர்பலவும்விரும்பியதிங்களுந்தங்கு [டயாம்
சென்னியருடையான்றேவர்தப்பெருமான்சேயிழையொடுமுறைவி
பொன்னியல் மணிபுமுரிகரிமருப்புஞ்சந்தமுமுந்துவல்திரைகள்
கன்னியராடக்கடலொலிமலியுங்கழுமலநகரெனலாமே. (௨)

ஏருறுதொண்டர்கொண்டடிபோற்றச்செழுமலர்புனலொடுதூபந்
தாருறுகொன்றைதம்முடிவைத்தசைவனூர்தங்கிடமென்று
மூரு அடபதிகளுலகுடன்பொங்கியொலிபுனல்கொளவுடன்மிதந்த
காருறுசெம்மைநன்மையால்மிக்ககழுமலநகரெனலாமே. (௩)

மன்னினிறோத்தவானுளார்பரசவந்தா[illegible]ளீட[illegible]த
ப[illegible]வேடமு

மெண்ணிறந்திமிக்காரியல்பினுணிறைந்தாரோந்திழையவரொடுமைந்த
ர்,கண்ணினுலின்பங்கண்டொளியாக்குங்கழுமலநகரெனலாமே. (௪)

சுருதியான்றலையுநாமகண்மூக்குஞ்சுடரவன்கரமுமுன்னியங்கு
பருதியான்பல்லுமிறுத்தவர்க்கருளும்பரமனார்பயின்றினிதிருக்கை
விருதினான்மறையுமங்கமோராறும்வேள்வியும்வேட்டவர்ஞானங்
கருதினாருலகிற்கருத்துடையார்சேர்கழுமலநகரெனலாமே. (௫)

புற்றில்வாளரவுமாமையும்பூண்டபுநிதனார்பனிமலர்க்கொன்றை,பற்றி
வான்மதியஞ்சடையிடைவைத்தபடிறனார்பயின்றினிதிருக்கை, செ
ற்றவன்றிரைகளொன்றொடொன்றோடிச்செயிர்த்தலவன்சங்கொடுவரி
கங், கற்றுறைவாகள்கரைக்குவந்துரைக்குங்கழுமலநகரெனலாமே

அலைபுனற்கங்கைதங்கியசடையாரடன்மழுவேலொருமூவிலைங்
கொலையிடைச்செந்தீவெந்தறக்கண்டகுழகனார்கோயிலதென்பரி
மலையின்மிசைதுயர்ந்தமரக்கலஞ்சரக்குமற்றுமற்றிடையிடையெங்குங்
கலைகளித்தேறிக்கானலில்வாழுங்கழுமலநகரெனலாமே. (௭)

ஒருக்கமுன்னினியாத்தக்கன்ற வேள்வியுடைதரவுகிரியபடையா
ரரக்கனைவரையாலாற்றலழித்தவழகனாரமர்ந்துறைகோயில
பரக்கும்வண்புகழாரழியவைபார்த்துப பலபலவறங்களேபயிற்றி
கரக்குமாறறியாவண்மையால்வாழுங்கழுமலநகரெனலாமே. (௮)

அருவனாயொருத்தயாற்றலின்றுணுபணிகளாத்தாமரையானு
மிருவருமேத்தவெரியுருவானவிறைவருறைவிடமவினவி
லொருவரிவ்வுலகில்வாழ்கிலாவண்ணமொலிபுனல்வெள்ளமுன்பரப்ப
க், கருவளைசூழ்ந்தகடலிடைமிதக்குங்கழுமலநகரெனலாமே. (௯)

உரிந்துயலுருவிலுடைதவிர்ந்தாருமத்துகில்போர்த்துழல்வா
ருந், தெரிந்துபுன்மொழிகள்செப்பினகேளாச்செம்மையார்நன்மை
யாலுறைவாங், குருந்துயர்கோங்குகொடிவிடுமுல்லைமல்லிகைசெண்
பகம்வேங்கை, கருந்தடங்கண்ணின்மங்கைமாகொய்யுங்கழுமலநக
ரெனலாமே. (௰)

கானலங்கழனியோதம்வந்துலவுங்கழுமலநகருறைவார்மேல்
ஞானசம்பந்தனற்றமிழ்மாலைநன்மையாலுரைசெய்துநவில்வா
ருனசம்பந்தத்துறுபிணிநீங்கியுள்ளமுமொருவழிக்கொண்டு
வானிடைவாழ்வர்மண்மிசைப்பிறவார்மற்றிதற்காணையுநமதே. (௰௧)

திருச்சிற்றம்பலம்

(திருவீழிமிழலை-பண்-புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

புள்ளித்தோலாடைபூண்பதுநாகம்பூசுசாந்தம்பொடிநீறு, கொள்ளி
த்தீவிளக்குக்கூளிகள்கூட்டங் காளியைக்குணஞ்செய்கூத்துடையோ,
னள்ளற்காராமையகடுவான்மதியமேய்க்கமுட்டாழைகளானை, வெள்
ளைக்கொம்பீனும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே.௧

இசைந்தவாறடியாரிடுதுவல்வானோரிழுகுசந்தனத்திளங்கமலைப், பசு
ம்பொன்வாசிகைமேற்பரப்புவாய்கரப்பாய் பத்திசெய்யாதவர்பக்க,
லசும்புபாய்கழனியலர்கயன்முதலோடடுத்தரிந்தெடுத்தவான்சும்மை,
விசும்புதூர்ப்பனபோல்விம்மியவீழிமிழலையானெனவினைகெடுமே.

நிருத்தனாறங்கனீற்றனான்மறையனீலமார்மிடற்றனெற்றிக்க
ணொருத்தன்மற்றெல்லாவுயிர்கட்குமுயிரா யுளனிலன்கேடிலியுமை
திருத்தமாய்நாளுமாடுநீர்ப்பொய்கைசிறியவரறிவினின்மிக்க[கோல
விருத்தனாயடிவீழ்ந்திடம்புகும்வீழிமிழலையானெனவினைகெடுமே.

தாங்கருங்காலந்தவிரவந்திருவர்தம்மொடுங்கூடினாரங்கம், பாங்கினாற்
பிரித்துப்பண்டுபோலெல்லாம்பண்ணியகண்ணுதற்பரமர், தேங்கொ
ள்பூங்கமுகுதெங்கிளங்கொடிமாச் செண்பகம்வண்பலாவிலுப்பை,
வேங்கைபூமகிழால்வெயிற்புகாவீழி மிழலையானெனவினைகெடுமே.

கூசுமாமயானங்கோயில்வாயிற்கட்குடவயிற்றனசிலபூதப், பூசு
மாசாந்தம்பூதிமெல்லோதிபாதிநற்டொங்கரவனையோன், வாசமாம்
புன்னைமௌவல்செங்கழுநீர்மலரணைந்தெழுந்தவான்றென்றல், வீசு
மாம்பொழிற்றேன்றுவலைசேர்வீழிமிழலையானெனவினைகெடுமே.௫

பாதியோர்மாதர்மாலுமோர்பாகர்பங்கயத்தயனுமோர்பால
ராதியாய்நடுவாயந்தமாய்நின்றவடிகளாரமரர்கட்கமரர்
போதுசேர்சென்னிப்புரூரவாப்பணிசெய்பூசுரர்பூமகனனைய
வேதியர்வேதத்தொலியறாவீழிமிழலையானெனவினைகெடுமே. (௬)

தன்றவம்பெரியசலந்தரனுடலந்தடிந்தசக்கரமெனக்கருளென்
றன்றரிவழிபட்டிழிச்சியவிமானத்திறையவன்பிறையணிசடைய
னின்றநாள்காலையிருந்தநாண்மாலைகிடந்தமண்மேல்வருகலியை
வென்றவேதியர்கள்விழாவறாவீழிமிழலையானெனவினைகெடுமே.(௭)

கடுத்தவாளரக்கன்கைலையன்றெடுத்தசரமுரஞ்சிரநெரிந்தலற, வட
ர்த்ததோர்விரலாலஞ்செழுத்துரைக்க வருளினன்றடமிகுநெடுவாள்,

படித்தநான்மறைகேட் டிருந்தபைங்கிளிகள் பதங்களையோதப்பாடி
ருந்த, விடைக்குலம்பயிற்றும்விரி பொழில் வீழி மிழலையானெனவி
னைகெடுமே. (௮)

அளவிடலுற்றவயனொடுமாலுமண்டமண்கிண்டியுங்காணா
முளையெரியாயமூர்த்தியைத்தீர்த்த முக்கணெம்முதல்வனைமுத்தைத்
தளையவிழ்கமலத்தவிசின்மேலன்னந்தன்னிளம்பெடையொடும்புல்கி
விளைகதிர்கவரிவீசவீற்றிருக்குமிழலையானெனவினைகெடுமே. (௯)

கஞ்சிப்போதுடையார்கையிற்கோசாரக்கலதிகள்கட்டுரைவிட்டு
வஞ்சித்தேவிரியவெழுந்தநஞ்சதனையுண்டமரர்க்கமுதருளி [ன்
யிஞ்சிக்கேகதலிக்கனிவிழக்கமுகின் குலையொடுப்பழம்விழத்தெங்கி
மிஞ்சுக்கேமஞ்சுசேர்பொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. ௰

வேந்தர்வந்திறைஞ்சவேதியர்வீழிமிழலையுள்விண்ணிழிவிமானத்
தேய்ந்ததன்றேவியோடுறைகின்றவீசனையெப்பெருமானைத் [தன்
தோய்ந்தநீர்த்தோணிபுரத்துறைமறையோன் றமிழ்ஞானசம்பந்
வாய்ந்தபாமாலைவாய் நவில்வாரவானவர்வழிபடுவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருவாலவாய-பண்-புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
யங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே. (௧)

வெற்றவேயடியாரடிமிசைவீழும்விருப்பினன்வெள்ளைநீறணியுங்
கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்சிறைகுலாவிநின்றேத்து
மொற்றைவெள்விடையனும்பரார்தலைவ னுலகினிலியற்கையையொ
ழிந்திட், டற்றவர்க்கற்றசிவனுறைகின்றவாலவாயாவதுமிதுவே. (௨)

செந்துவர்வாயாள்சேலனகண்ணாள்சிவன்றிருநீற்றினைவளர்க்கும்
பந்தணைவிரலாள்பாண்டிமாதேவிபணிசெயப்பாரிடைநிலவுஞ்
சந்தமார்தரளம்பாம்புநீர்மத்தந்தண்ணெருக்கம்மலர்வன்னி
யந்திவான்மதிசேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௩)

கணங்களாய்வரினுந்தமியராய்வரினு மடியவர்தங்களைக்கண்டாற், கு
ணங்கொடுபணியுங்குலச்சிறைகுலாவுங்கோபுரஞ்சூழ்மணிக்கோயில்

மணங்கமழ்கொன்றைவாளராமதியம்வன்னிவண்கூவிளமாலை
யணங்குவீற்றிருந்தசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௪)

செய்யதாமரைமேலன்னமேயனையசேயிழைதிருநுதற்செல்வி
பையரவல்குற்பாண்டிமாதேவிநாடொறும்பணிந்தினிதேத்த
வெய்யவேற்சூலம்பாசமங்குசமான்விரிகதிர்மழுவுடன்றரித்த
ஐயனுமுமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௫)

நலமிலராகநலமதுண்டாகநாடவர்நாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்ட
னலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௬)

முத்தின்றாழ்வடமுஞ்சந்தனக்குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப்
பத்தியார்கின்றபாண்டிமாதேவிபாங்கொடுபணிசெயநின்ற
சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனேசுடர்மரகதமடுத்தாற்போ
லத்தனுமுமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௭)

நாவணங்கியல்பாமஞ்செழுத்தோதிநல்லராய்நல்லியல்பாகுங்
கோவணம்பூதிசாதனங்கண்டாற்றொழுதெழுகுலச்சிறைபோற்ற
மேவணங்கியலவாமிராவணன்றிண்டோளிருபதுநெரிதரவூன்றி
யாவணங்கொண்டசடைமுடியண்ணலாலவாயாவதுமிதுவே. (௮)

மண்ணெலாநிகழமன்னனாய்மன்னுமணிமுடிச்சோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துப
விண்ணுளாரிருவர்கீழொடுமேலுமளப்பரிதாம்வகைநின்ற [ரவ
வண்ணலாருமையோடின்புறுகின்றவாலவாயாவதுமிதுவே. (௯)

தொண்டராயுள்ளார்திசைதிசைதோறுந்தொழுதுதன்குணத்தினைக்கு
கண்டுநாடோறுமின்புறுகின்றகுலச்சிறைகருதிநின்றேத்தக் [லாவக்
குண்டராயுள்ளார்சாக்கியர்தங்கள்குறியின்கணெறியிடைவாரா
வண்டநாயகன்றானமர்ந்துவீற்றிருந்தவாலவாயாவதுமிதுவே. (௰)

பன்னலம்புணரும்பாண்டிமாதேவிகுலச்சிறையெனுமிவர்பணியு
மன்னலம்பெறுசீராலவாயீசன்றிருவடியாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரியகாழியுள்ஞானசம்பந்தன்செந்தமிழிவைகொண்
டின்னலம்பாடவல்லவரிமையோரேத்தவீற்றிருப்பவரினிதே. (௰௧)

திருச்சிற்றம்பலம்

---

(திருப்பந்தணநல்லூர்-பண்-புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

இடறினார்கூற்றைப்பொடிசெய்தார்மதிலையிவைசொலியுலகெழுந்தேத்தக், கடறினாராவர்காற்றுளாராவர்காதலித்துறைதருகோயில் கொடிநுழைந்தியாதுங்குறைவிலார்தாம்போய்க்கோவணங்கொண்டுகூத்தாடும், படிறினார்போலும்பந்தணநல்லூர் நின்றவெம்பசுபதியாரே.

கழியுளாரெனவுங்கடலுளாரெனவுங்காட்டுளார்நாட்டுளாரெனவும் வழியுளாரெனவுமலையுளாரெனவுமண்ணுளார்விண்ணுளாரெனவுஞ் சுழியுளாரெனவுஞ்சுவடுதாமறியார் தொண்டர்வாய்வந்தனசொல்லும் பழியுளார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௨)

காட்டினாரெனவுநாட்டினாரெனவுங்கடுந்தொழிற்காலனைக்காலால் வீட்டினாரெனவுஞ்சாந்தவெண்ணீறுபூசியோர்வெண்மதிசடைமேற் சூட்டினாரெனவுஞ்சுவடுதாமறியார்சொல்லுளசொல்லுநால்வேதப் பாட்டினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௩)

முருகினார்பொழில்சூழுலகினாரேத்த மொய்த்தபல்கணங்களின்றுயர் கண், டுருகினாராகியுறுதிபோந்துள்ளமொண்மையாலொளிதிகழ்மே னி, கருகினாரெல்லாங்கைதொழுதேத்தக்கடலுணஞ்சமுதமாவாங்கிப் பருகினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௪)

பொன்னினார்கொன்றையிருவடங்கிடந்துபொறிகிளர்பூணநூல்புரள மின்னினாருருவின்மிளிர்வதோரரவமேவுவெண்ணீறுமெய்பூசித் துன்னினார்நால்வர்க்கறமமர்ந்தருளித் தொன்மையார்தோற்றமுங்கே டும், பன்னினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே (௫)

ஒண்பொனாரனையவண்ணல்வாழ்கெனவு முமையவள்கணவன்வாழ்கெ [னவு மண்பினார்பிரியாரல்லுநண்பகலுமடியவரடியிணைதொழவே நண்பினாரெல்லாநல்லரென்றேத்தவல்லவர்தீயரென்றேத்தும் பண்பினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௬)

எற்றினாரேதுமிடைகொள்வாரில்லையிருநிலம்வானுலகெல்லை தெற்றினார்தங்கள்காரணமாகச்செருமலைந்தடியிணைசேர்வான் முற்றினார்வாழுமும்மதில்வேவமூவிலைச்சூலமுமழுவும் பற்றினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௭)

ஒலிசெய்தகுழலின்முழவமதியம்பவோசையாலாடலறாத கலிசெய்தபூதங்கையினாலிடவேகாலினார்பாய்தலு...

வலிகொள்வர்புலியினுரிகொள்வரேனைவாழ்வுநன்றாகுமோர்தலையிற்
பலிகொள்வர்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசுபதியாரே. (௮)

சேற்றினார்பொய்கைத்தாமரையானுஞ் செங்கண்மாலிவரிருகூ
றாத், தோற்றினார்தோற்றத்தொன்மையையறியார் துணைமையும்பெரு
மையுந்தம்மிற், சாற்றினார்சாற்றியாற்றலோமென்னச்சரண்கொடுத்த
வர்செய்தபாவம், பாற்றினார்போலும்பந்தணநல்லூர்நின்றவெம்பசு
பதியாரே. (௯-௰)

கல்லிசைபூணக்கலையொலியோவாக்கழுமலமுதுபதிதன்னி
னல்லிசையாளன்புல்லிசைகேளாநற்றமிழ்ஞானசம்பந்தன்
பல்லிசைபகுவாய்ப்படுதலையேந்திமேவியபந்தணநல்லூர்
சொல்லியபாடல்பத்தும்வல்லவர்மேற்றொல்வினைசூழகிலாவே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

ஆ பதிகம் - ௩௨௰.

(திருஓமமாம்புலியூர்-பண்-புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

பூங்கொடிமடவாளுமையொருபாகம்புரிதருசடைமுடியடிகள்
வீங்கிருணட்டமாடுமெம்விகிர்தர்விருப்பொடுமுறைவிடம்வினவிற்
றேங்கமழ்பொழிலிற்செழுமலர்கோதிச்செறிதருவண்டிசைபாடு
மோங்கியபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௧)

சம்பரற்கருளிச்சலந்தரன்வீயத்தழலுமிழ்சக்கரம்படைத்த
வெம்பெருமானாரிமையவரேத்தவினிதினங்குறைவிடம்வினவி
லம்பரமாகியழலுமிழ்புகையினாகுதியான்மழைபொழியு
மும்பர்களேத்துமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௨)

பாங்குடைத்தவத்துப்பகீரதற்கருளிப்படர்சடைக்கரந்தநீர்க்கங்கை
தாங்குதறவிர்த்துத்தராதலத்திழித்ததத்துவனுறைவிடம்வினவி
லாங்கெரிமூன்றுமமர்ந்துடனிருந்தவங்கையாலாகுதிவேட்டு
மோங்கியமறையோரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௩)

புற்றரவணிந்துநீறுமெய்பூசிப்பூதங்கள்சூழ்தரவூரூர்
பெற்றமொன்றேறிப்பெய்பலிகொள்ளும்பிரானவனுறைவிடம்வின
கற்றநால்வேதமங்கமோராறுங்கருத்தினாருத்தியாற்றெரியு [விற்
முற்றபல்புகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (௪)

நிலத்தவர்வானமாள்பவர்கீழோர்துயர்கெடநெடியமாற்கருளா
லலைத்தவல்லசுரராசறவாழியளித்தவனுறைவிடம்வினவிற், சலத்தினாற்

பொருள்கள் வேண்டுதல்செய்யாத் தன்மையார்நன்மையான்மிக்க,
வுலப்பில்பல்புகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே.(ரு)

மண்ணுந்திகழ்திசைகளெட்டுமேழிசையுமலியுமாறங்கமைவேள்வி [ருங்
யிணைந்தநால்வேதமூன்றெரியிரண்டு பிறப்பெனவொருமையாலுண
குணங்களுமவற்றின்கொள்பொருள்குற்றமற்றவையுற்றதுமெல்லா
முணர்ந்தவர்வாழுமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. சு-எ

தலையொருபத்துந்தடக்கையதிரட்டிதானுடையரக்கனொண்கயிலை
யலைவதுசெய்தவவன்றிறல்கெடுத்தவாதியாருறைவிடம்வினவில்
மலையெனவோங்குமாளிகைநிலவுமாமதில்மாற்றலரென்று
முலவுபல்புகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (அ)

கள்ளவிழ்மலர்மேலிருந்தவன்கரியோனென்றிவர்காண்டரிதாய
வொள்ளெரியுருவருமையவளோடுமுகந்தினிதுறைவிடம்வினவிற்
பள்ளநீர்வாளைபாய்தருகழனிப்பனிமலர்ச்சோலைசூழாலை
யொள்ளியபுகழாரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (கூ)

தெள்ளியரல்லாத்தேரரோடமணர்தடுக்கொடுசீவரமுடுக்குங்
கள்ளமார்மனத்துக்கலதிகட்கருளாக்கடவுளாருறைவிடம்வினவி
னள்ளிருள்யாமநான்மறைதெரிந்துநலந்திகழ்மூன்றெரியோம்பு
மொள்ளியார்வாழுமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. (ய)

விளைதருவயலுள்வெயில்செறிபவளமேதிகண்மேய்புலத்திடறி
யொளிதரமல்குமோமமாம்புலியூருடையவர்வடதளியரனைக்
களிதருநிவப்பிற்காண்டகுசெல்வக்காழியுண்ஞானசம்பந்த
னளிதருபாடல்பத்தும்வல்லார்களமரலோகத்திருப்பாரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

(திருக்கோணமாமலை-பண்-புறநீர்மை.)

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்கொடியணிவிடைய
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக் [ர்
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே. (க)

கடிதெனவந்தகரிதனையுரித்தவ்வுரிமேனிமேற்போர்ப்பர், பிடிய
னநடையாள்பெய்வளைமடந்தைபிறைநுதலவளொடுமுடனாய்க், கொ
டிதெனக்கதறுங்குரைகடல்சூழ்ந்துகொள்ளமுனித்திலஞ்சுமந்து,குடி
தனைநெருக்கிப்பெருக்கமாய்த்தோன்றுங் கோணமாமலையமர்ந்தாரே.

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடைவைத்தார்
கனித்திளந்துவர்வாய்க்காரிகைபாகமாகமுன்கலந்தவர்மதின்மேற்
றனித்தபேருருவிழித்தழனாகந்தாங்கியமேருவெஞ்சிலையாக்
குனித்ததோர்வில்லார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே ௩

பழித்திளங்கங்கை சடைமுடிவைத்துப் பாங்குடைமதனனைப்
பொடியா, விழித்தவன்றேவிவேண்டமுன்கொடுத்த விமலனார்கமல
மலர்பாதர், தெழித்துமுன்னரற்றுஞ்செழுங்கடற்றரளஞ் செம்பொ
னுமிப்பியுஞ்சுமந்து, கொழித்துவன்றிரைகள்கரையிடைச்சேர்க்குங்
கோணமாமலையமர்ந்தாரே. (௪)

தாயினுநல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள்
வாயினுமனத்துமருவிநின்றகலாமாண்பினர்காண்பலவேடர்
நோயிலும்பிணியுந்தொழிலர்பானீக்கிநுழைதருநூலினர்ஞாலங்
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே.(௫)

பரிந்துநன்மனத்தால்வழிபடுமாணி தன்னுயிர்மேல்வருங்கூற்
றைத், திரிந்திடாவண்ணமுதைத்தவற்கருளுஞ்செம்மையார் நம்மை
யாளுடையார், விரிந்துயர்மௌவன்மாதவிபுன்னைவேங்கைவண்செ
ருந்திசெண்பகத்தின், குருந்தொடுமுல்லைகொடிவிடும்பொழில்சூழ்
கோணமாமலையமர்ந்தாரே. (௬-௭)

எடுத்தவன்றருக்கையிழித்தவர்விரலாலேத்திடவாத்தமாம்பேறு, தொ
டுத்தவர்செல்வந் தோன்றியபிறப்பு மிறப்பறியாதவர்வேள்வி, தடுத்
தவர்வனப்பால்வைத்ததோர்கருணை தன்னருட்பெருமையும்வாழ்வுங்,
கொடுத்தவர்விரும்பும்பெரும்புகழாளர் கோணமாமலையமர்ந்தாரே.

அருவராதொருகைவெண்டலையேந்தியகந்தொறும்பலியுடன் புக்க
பெருவராயுறையுநீர்மையர்சீர்மைப்பெருங்கடல்வண்ணனும்பிரம
னிருவருமறியாவண்ணமொள்ளெரியாயுயர்ந்தவர்பெயர்ந்தநன் மாற்குங்
குருவாய்நின்றார்குரைகழல்வணங்கக்கோணமாமலையமர்ந்தாரே. (௯)

நின்றுணுஞ்சமணுமிருந்துணுந்தேருநெறியலாதனபுறங்கூற
வென்றுநஞ்சுண்ணும்பரிசினரொருபான் மெல்லியலொடுமுடனாகித்
துன்றுமொண்பூவமவ்வலுஞ்சூழ்ந்துதாழ்ந்துறுதிரைபலமோதிக்
குன்றுமொண்கானல்வாசம்வந்துலவுங்கோணமாமலையமர்ந்தாரே. (௯)

குற்றமிலாதார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தானைக்
கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடைஞானசம்பந்த
னுற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப்பவர்கேட்பவருயர்ந்தோர்
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே.

திருச்சிற்றம்பலம்.

ஈழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-கோணீசர்-தேவியார்-மாதுமையம்மை.

---

(திருவெள்ளடை-பண்-அந்தாளிக்குறிஞ்சி.)

திருச்சிற்றம்பலம்.

கண்ணவெண்ணீறணிமார்பிற்றோல்புனைந்
தெண்ணரும்பல்கணமேத்தநின்றாடுவார்
விண்ணவர்பைம்பொழில்வெள்ளடைமேவிய
பெண்ணமர்மேனியெம்பிஞ்ஞகரே. (௧)

திரைபுல்குகங்கைதிகழ்சடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழ்தண்பொழில்வெள்ளடைமேவிய
வரைமல்குவாளரவாட்டுகந்தீரே. (௨)

அடையலர்தொன்னகர்மூன்றெரித்தன்ன
நடைமடமங்கையோர்பாகநயந்து
விடையுகந்தேறுதிர்வெள்ளடைமேவிய
சடையமர்வெண்பிறைச்சங்கரனீரே. (௩)

வளங்கிளர்கங்கைமடவரலோடு
களம்படவாடுதிர்காடரங்காக
விளங்கியதண்பொழில்வெள்ளடைமேவிய
விளம்பிறைசேர்சடையெம்பெருமானே. (௪)

சுரிகுழனல்லதுடியிடையோடு
பொரிபுல்குகாட்டிடையாடுதிர்பொங்கு
விரிதருபைம்பொழில்வெள்ளடைமேவிய
வெரிமழுவாட்படையெந்தைபிரானே (௫)

காவியங்கண்மடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேந்திநின்றாடுதிர்தேன்மலர்
மேவியதண்பொழில்வெள்ளடைமேவிய
வாவினிலைந்துங்கொண்டாட்டுகந்தீரே. (௬ எ-அ ௯-௰-௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

(திருநல்லூர்ப்பெருமணம்-பண்-அந்தாளிக்குறிஞ்சி)

திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம்
பல்லூர்ப்பெருமணப்பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ்சூடலரேதொண்டர்
நல்லூர்ப்பெருமணமேயநம்பானே. (௧)

தருமணலோதஞ்சேர்தண்கடனித்திலம்
பருமணலாக்கொண்டுபாவைநல்லார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநல்லூர்ப்
பெருமணத்தான்பெண்ணோர்பாகங்கொண்டானே. (௨)

அன்புறுசிந்தையராகியடியவர்
நன்புறுநல்லூர்ப்பெருமணமேவிநின்
றின்புறுமெந்தையிணையடியேத்துவார்
துன்புறுவாரல்லர்தொண்டுசெய்வாரே. (௩)

வல்லியந்தோலுடையார்ப்பதுபோர்ப்பது
கொல்லியல்வேழத்துரிவிரிகோவணம்
நல்லியலார்தொழுநல்லூர்ப்பெருமணம்
புல்கியவாழ்க்கையெப்புண்ணியனார்க்கே. (௪)

ஏறுகந்தீரிடுகாட்டெரியாடிவெண்
ணீறுகந்தீர்நிரையார்விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திருநல்லூர்ப்பெருமணம்
வேறுகந்தீருமைகூறுகந்தீரே. (௫)

சிட்டப்பட்டார்க்கெளியான்செங்கண்வேட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னியான்பதியாவது
நட்டக்கொட்டாட்டறாநல்லூர்ப்பெருமணத்
திட்டப்பட்டாலொத்தீராலெம்பிரானீரே. (௬)

மேகத்தகண்டனெண்டோளன்வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய்புலித்தோலொடுபந்தித்த
நாகத்தனல்லூர்ப்பெருமணத்தானல்ல
போகத்தன்யோகத்தையேபுரிந்தானே. (௭)

தக்கிருந்தீரன்றுதாளாலரக்கனை
யுக்கிருந்தொல்கவுயர்வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்றுநல்லூர்ப்பெருமணம்
புக்கிருந்தீரெமைப்போக்கருளீரே. (அ)

ஏலுந்தண்டாமரையானுமியல்புடை
மாலுந்தம்மாண்பறிகிற்றிலர்மாமறை
நாலுந்தம்பாட்டென்பர்நல்லூர்ப்பெருமணம்
போலுந்தங்கோயில்புரிசடையார்க்கே. (௯)

ஆதரமணொடுசாக்கியர்தாஞ்சொல்லும்
பேதைமைகேட்டுப்பிணக்குறுவீர்வம்மி
னாதனைநல்லூர்ப்பெருமணமேவிய
வேதனைத்தாடொழவீடெளிதாமே. (௰)

நறும்பொழிற்காழியுண்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க்
கறும்பழிபாவமவலமிலரே. (௰க)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-சிவலோகத்தியாகேசர்-தேவியார்-நங்கையுமைநாயகி.

ஆ பதிகம் - ௫௨.

மூன்றாந்திருமுறை

முற்றிற்று.

மூவர்முதலிகளுள் முதல்வராகிய

திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

மூன்றுதிருமுறையும்

முற்றுப்பெற்றன.

---

திருச்சிற்றம்பலம்.

# பரமசிவத்தினுடைய

## அட்டவீரட்டம்.

பூமன்சிரங்கண்டி யந்தகன்கோவல் புரமதிகை - *
மாமன்பறியல்சலந்தரன்விற்குடி மாவழுவூர் - *
காமன்குறுக்கையமன்கடவூரிந்தக் காசினியிற் - *
றேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதன் சேவகமே. *

(இதன்பொருள்)

கொன்றைப்பூமாலையுடன்சூடிய இளந்திங்களுந் தரித்துக்கொண்டருளிய பரமசிவம் வீரஞ்செலுத்தியது.—திருக்கண்டியூரில் - பிரமதேவன் சிரங்கொய்ததும்.—திருக்கோவலூரில் - அந்தகாசுரனை யெரித்ததும்.—திருவதிகையில் - திரிபுரம் எரித்ததும்.—திருப்பறியலூரில் - தக்கன்சிரத் தடிந்ததும்.—திருவிற்குடியில் - சலந்தரனைத் தலையரிந்ததும்.—திருவழுவூரில் - யானையையுரித்ததும்.— திருக்குறுக்கையில் - மன்மதனைத் தகனஞ்செய்ததும்.— திருக்கடவூரில் - யமனையுதைத்ததும்.